உ

# ஸ்ரீ ராம ஜாதகம்

By

ஸ்ரீ சேஷசாஸ்திரிகள்
ஸ்ரீ கிருஷ்ணையர்

50 ந. பை.

பதிப்பாளர் :

D. பத்மநாபன்

உ

ஸ்ரீ ராமஜயம்

# ஸ்ரீ ராமஜாதகம்

தில்லைச்சிதம்பரம் - பஞ்சகுரோசமத்தியில்
தச்சக்காடு என்று வழங்குகின்ற
தக்ஷகவனத்திலிருக்கும்

கௌண்டின்ய கோத்திரரும், ஆபஸ்தம்ப சூத்திரருமாகிய
இராமசுவாமி சாஸ்திரியார் குமாரர்

சேஷசாஸ்திரியாராலியற்றப்பட்டது.

இஃது

புரசை - அஷ்டாவதானம்
சபாபதி முதலியாரவர்கள் முன்னிலையில்
பார்வையிடப்பட்டது.

oooooo

1896-ம் வருஷம் மேமீ அச்சிட்டதை

சேஷாசாஸ்திரியார் சகோதரர் ஸ்ரீ கிருஷ்ணையர்
அவர்களின் பௌத்ரரான

D. பத்மநாபன், M.A., BAR-AT-LAW, I.C.S. (Retd.)

அவர்களால் புதுப்பிக்கப்பட்டது

1962

உ

ஸ்ரீராமாய நம:

# சிறப்புப்பாயிரம்

புரசை அஷ்டாவதானம்—சபாபதி முதலியாரவர்களால் இயற்றப்பட்டது

**நேரிசையாசிரியப்பா**

மாதவ முதிரும் மாண்பமை யிருவர்
இடையறுப் பயிற்சி யேத்தும் நிலையது
கண்ணுதற் பெருமான் காரிகை காணிய
அன்னவர் முன்னே ஞான்றருள் பெறீஇயுய்வான்
உருவருவாய் நின்றொளி நடநவின்றது
சாந்தானகுரவர் சமயவாசிரியர்
நந்தாவுலக நவையறவெழுதாப்
பனுவற்கொழி தமிழ்ப் பலிரொடை புனைந்தது
உலகமுழுவதூஉமுருவாமொருவற்
கலகில் சீர்சான்ற வகமலராயது
தில்லைப் பதிக்கட்செறிந்த வைங்குரோசத்
தெல்லை நாப்பணியல் வடபாலது
தடமாமலர்ப் பொழிற்றலை நறுத்துணர் கொய்
மடவார் அரிகுழன் மஞ்ஞைமுற்கரணூஉக்
கருமுகிலிது கொலென்ற கங்களிசிறப்பக்
கட்புலநோக்கு புகாவி போன்மெனப்
பெட்புறு மதுகரம் பிறங்குபு கறங்க
வரிமிடற்றினைவால் வளையினங்காணப்
பிரிவறவாவயின் பேழ்வாயிரட்ட
விளரியஞ்சுரும்பர் மிழற்றுநூற்றிதழ்

முளரியம் பொற்பூந்தவிசிடை யிறைகொளுஞ்
செஞ்சுட்டனக்குழாம் புணர்முலைத்தெரிவையர்
பஞ்சுட்டடிநடை பார்த்தவாம்வளத்த
தெனுந்தக்கக வனத்தினில் வாழ்முதற்குலம்
தாங்குமி ராமசாமி சாஸ்திரிதவத்
தோங்குமெய்யனு லப்பிலாரியம்
செந்தமிழ்ப்·பன்னூற்றெளிதரு புலமை
முந்து மருமறை முறைகூறொழுக்கம்
பாவலர் காமுறும் பண்புசால்வேதியச்
சேஷசாஸ்திரி சீராமகாதை
இயையுங்கம்பரிராமாயாணத்தைக்
கவலறத்தன்னுழிக் கற்குங்கனிட்டனுங்
கிழமைசாலிளவல் கிருஷ்ணசாஸ்திரி
அந்நூற்றி ருவவதாரப் படலத்
தென்னுலெளிதுணர்தற் கிசைவில்லதாய்
மொழி மேடமாமதி யெனுமுதற் குறிப்புள
கவிதையை நன்கு கரிசறவாராய்ந்
தெற்கு விரிவகையியம்புதி யென்ன
வேண்டலுஞ் சோதிடவிதி நூலுணர்ச்சி
காண்டகைக் கியன்ற கற்பினிலதற்குரை
ஐவகையாயுரைத்தாங்காங்குயர்தவ
மெய்யுணர் வான்மீகப் பெயர் விற்பன
ரிசைத்த வடநூலி ராமாயணத்து
ளெடுத்த மேற்கோளும் அளவுறவியல்வரை
மணிநீர்ப்புவியுளோர் மகிழ்ந்தனர்தலைக்கொள
அணிபெற வியற்றினன் அருந்தமிழ்ப் புலவர்
வடநூற்பரிணிதர்மதிப்ப
நெடுநீர்ப்புவியிசை நிலைபொறுத்தினனே.

———

அகௌண்டண்ட் ஜெனரலாபீஸ் சூப்ரெண்டண்டாகிய
ம-ா-ா-ஸ்ரீ, யாழ்ப்பாணம்
சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் இயற்றியது

**கழி நெடிலடி விருத்தம்**

தக்கக வனத்தோன் கலாநிதி
யிராமசாமி சாஸ்திரி தவமுரு வாய்ப்
புக்க சேஷ சாஸ்திரி புலியூர்
பொறுத்துமைங்கு ரோசமத்தியினுன்
செக்கர் மேனியினுன்றிருவடி மறவாத்
தேசிகனிராம ஜாதகத்திற்
கெக்கலைஞர்களும் வியப்பவைந்துரை
யீண்டியற்றியதிறத்தையென் சொல்வாம்

**நேரிசை வெண்பா**

கம்பன் விதையாகக் கட்டுரைத்தா னேற்கவி மற்
றிம்பர் மரமாவெழுவித்தான்—ஐம்பொருவி
லாத வுரையா லடல்சேஷ சாஸ்திரிபொய்
வாதவுரை யெல்லாம் வதைத்து
சேஷனென்றுற் பின்னுமொன்று செப்பப்பாற்
—றேவாதி
சேஷன் பெருமைத் தெரியாதோ—சேஷன்
றெரித்த வுரையின் றிறமளக்கக் கம்ப
னுரைத்தகவி கோலா வுறும்.

———

தஞ்சாவூர்ஜில்லா—ராஜமன்னார்கோவில்
இராஜு சாஸ்திரியாரால் இயற்றப்பட்டது

उत्फुल्लनीलनलिनोदरसोदरश्रीः
उत्कूलसान्द्रकरुणाभरणान्तरङ्गः ।
आभीरवामनयनानयनामृतांशु—
रानन्दमाकलयतां ममराजगोपः ॥
श्रीमत्कल्याणगुणालङ्कृतचेतसाम् ।
राजराजादिपूज्यानां सर्वशास्त्रविदांबराम् ॥
परोपकारप्रवण करणत्रयशोभिनाम् ।
अस्मदाचार्यपुत्राणां श्रीकृष्णार्याभिधाजुषाम् ॥
अनेक आशिषः प्रोच्यत्यागराजाध्वरीसु धीः ।
इदं पत्रं लिखितवानाजानप्रेमगौरवात् ॥
शेषशास्त्रीतिविख्यातः ज्योतिश्शास्त्रेपि को विदः ॥
श्रीमद्रामायणेकंब पूर्वरामायणे पिच ।
ऐककण्ठ्यमति बलादापदयति बुद्धिमान् ॥
रामजातकविद्यायां प्रवीणोभासतेमम ।
महत्प्रभूणां सदसियोग्यतास्य प्रकट्यताम् ॥

———

## முகவுரை

எனது பாட்டனுர் ஸ்ரீ கிருஷ்ணையரும், அவருடைய சகோதரர் ஸ்ரீ சேஷா சாஸ்திரிகளும் ஸ்ரீ ராமபிரானது சரணுரவிந்தங்களில் அசஞ்சலமான பக்தியும், தமிழ் வடமொழி, ஜோதிஷம் ஆகியவைகளில் நல்ல புலமையும் வாய்ந்தவர்கள். அவ்விருவர்களின் பக்தியின் ஆர்வத்திலுைம், நீண்ட நாள் ஆராய்ச்சியினுலும் தோன்றியதுதான் இந்த "ஸ்ரீராம ஜாதகம்" என்ற நூல். இதன் முதற் பதிப்பு நூலாசிரியர்களாலேயே 1896-ம் ஆண்டு வெளியிடப் பட்டது. அதன் பின் பலகாரணங்களால் மறுமுறை வெளிவர வியலாமற் போயிற்று

அதனை இப்பொழுது ஸ்ரீராமனின் அனுக்கிரகத்தைத் துணைக்கொண்டும், பெரியவர்களின் நல்லாசியைத் துணையாகக் கொண்டும் ஸ்ரீராம ஜாதகத்தை வெளியிடும் நற்பணியிலீடுபட்டேன். இந்த புத்தகத்தை மிக்க முயற்சியுடன் பாதுகாத்து வைத்திருந்து தக்க சமயத்தில் தந்துதவியவரும், ஸ்ரீராம ஜாதக நூலாசிரியர்களில் ஒருவரான—ஸ்ரீசேஷா சாஸ்திரிகளின் பௌத்திரருமான சிதம்பரம் புதுத்தெரு R. கிருஷ்ணசாமி ஐயரவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். புத்தகம் வெளி வருவதில் மிக்க பிரயாசை யெடுத்துக் கொண்டு அச்சுப் பிழை முதலியவை சரிபார்த்த சிரஞ்சீவி இரா. சுப்பிரமணியனுக் (கண்ணன்) கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு
D. பத்மனுபன். M.A, I.C.S. (Retd)
Bar-at-Law

இந்நூலை என் பெற்ருேர்கள் ஸ்ரீமதி யோகாம்பாள், Prof. T. K. துரைசாமி ஐயர் இவர்களின் ஞாபகார்த்தமாக வெளியிடப்படுகிறது.

# ஸ்ரீராம ஜாதகம்

## முதலாவது உரை (பக்கம் 7)

| | | | |
|---|---|---|---|
| * சுக்கிரன் | * சூரியன்<br>‡ புதன் | | ‡ கேது |
| | இராசி<br>(கடகம்) | | லக்நம் * குரு<br>† சந்திரன் |
| * குஜன் | | | |
| ‡ ராகு | | * சனி | |

* உச்சம்—5

† ஸ்வக்ஷேத்ரம்—1

‡ மித்ரம்—3

## இரண்டாவது உரை (பக்கம் 23)

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன்<br>சனி | | | ராகு<br>சூரியன் |
| | அம்சம்<br>(கடகம்) | | லக்நம்<br>சந்திரன் |
| | | | குரு |
| கேது<br>புதன் | | | குஜன் |

சூர்யன் மா—3
புதன் ஐ—9
சந்திரன் நீதி—4
கேது நாடி – 9
ராகு—3
அதி உச்சம்
சுக்கிரன்—12
சனி—12
குரு—5
குஜன்—6

| நிர் | பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 1. | முன் | 14 | சேஷா | சேஷ |
| 2. | முகவுரை | 2 | சேஷா | சேஷ |
| 3. | | 6 | நோன்றியது | தோன்றியது |
| 4. | | 17 | சேஷா | சேஷ |
| 4. | | 21 | சிரிஞ்சிவி | சிரஞ்சீவி |
| 5. | அர்ப்பணம் | 1 | நூலே | நூல் |
| 6. | | 2 | ஞாபா | ஞாப |
| 7. | 2 | 3 | சேஷா | சேஷ |
| 8. | | 19 | நவாம்சம் | நவாம்சம் |
| 9. | 3 | 13 | மைத்தருண் | மைந்தருண் |
| 10. | | 16 | வெண்ணி | வென்னி |
| 11. | 5 | 27 | பாவ | பல |
| 12. | | 31 | மிளிய கருப்ப | மினிய தேவதா பத்தி உயர்சவுரியம் பிரதாபம், இழிந்திடு மிரவு கருப்ப |
| 13. | 6 | 17 | பர்யத்தானும் | பர்யத்தாலும் |
| 14. | | 23 | யாமு | யாழு |
| 15. | 8 | 3 | பேண் | பெண் |
| | 9 | | 9 முதல் 70 வரை | பக்கங்களை திருத்திக்கொள். |
| 16. | 20 | 23 | உயிர் 6 | உயிர் 4 |
| 17. | | 25 | இதர | இகர |
| 18. | | 29 | லக்க | லக்ந |
| 19. | | 34 | தந்த | வந்த |
| 20. | 21 | 19 | தாத்பாய காதது | தாத்பர்யமாவது |
| 21. | 22 | 22 | ... | புதநவாம்சம் நனுசு |
| 22. | 23 | 16 | யாததால் | யாதலால் |
| 23. | | 17 | இருவரும் | இவரும் |
| 24. | 25 | 6 | பலஹீன | ஹீன |
| 25. | | 22 | விருவகை வாக்ய | வறுவகைவர்க்க |

| நிர் | பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 26. | 26 | 13 | ஞக்காஹேஷி | நாஸஹாக்ரஹேஷு |
| 27. | | 3 | ஸ்வன | ஸ்வ |
| 28. | | 33 | மென்றும் இப் பத | மென்றும் அல்லது இப்பத |
| 29. | 27 | 4 | லன்ன | லக்ன |
| 30. | 28 | 18 | ராம | ஸ்ரீராம |
| 31. | | 27 | மென்னில் | மெனில் |
| 32. | 31 | 3 | 39 | 59 |
| 33. | | 5 | ரிஷயம் | ரிஷபம் $4\frac{3}{4}$ |
| 34. | | 6 | 2-56-11 | 2-59-11 |
| 35. | | 8 | மேஷம் 49 | மேஷம் $4\frac{1}{4}$ |
| 36. | | 9 | 820 | $82\frac{1}{2}$ |
| 37. | | 10 | விநாடி 220 | விநாடி 22 |
| 38. | | 28 | ரிஷபம் 40 | ரிஷபம் $4\frac{3}{4}$ |
| 39. | | 30 | கித்த | சுத்த |
| 40. | 33 | 12 | கோதிலாதலன் | கோதிலாதவன் |
| 41. | | 17 | திதியிலைாம் | திதியிலைாய |
| 42 | 34 | 4 | பவரதலின் | பவராதலின் |
| 43. | 35 | 9 | அருணிருந்த்ன் | அனிருத்தன் |
| 44. | | 15 | மிகைந்திட்டான | மிலங்கதிட்டான |
| 45. | | 18 | நிகழ்த்துவ | நிகழ்த்துவர் |
| 46. | | 22 | பூணநு | பூர்ணநு |
| 47. | | 26 | (ல் சேர்) | திதிபலன் ஒருபங்கு வாரபலன் எட்டு பங்கு நக்ஷத்ர பலன் நூறுபங்கு லக்ந பலன் கோடி பங்கு |
| 48. | 36 | 17 | நாரடிம் | நாடில் |
| 49. | | 20 | ஏகாதருத்ரர் | ஏகாதசருத்ரர் |
| 50. | | 21 | அம்சங்சுளின் | அம்சர்களின் |
| 51. | 37 | 8 | 26 ஆகிறது | 25 ஆகிறது |

| நர் | பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 52. | | 12 | 14 | 24 |
| 53. | | 20 | சதுர | சதுஷ்ட |
| 54. | | 30 | தானென்று | தானென்றும் |
| 55. | 38 | 10 | மா 5 | ம. 5 |
| 56. | | 16 | திவஸம் | திவ்யஸம் |
| 57. | 39 | 25 | மணமாம் | ப்ரணமாம் |
| 58. | | 30 | பாடக | கடக |
| 59. | 40 | 12 | ஸஸூர்ய | ஸூர்ய |
| 60. | 41 | 24 | இவ்வைங்யையோ | இவ்வைவ |
| 61. | 42 | 6 | சுக்ரனனவர் | சுக்ரனவர் |
| 62. | | 18 | னுதயராகி | னுதயராசி |
| 63. | | 36 | சிஷ்யராகனும் | சிஷ்யராகவும் |
| 64. | 44 | 8 | சோடதிம் | சோதிடம் |
| 65. | | 10 | அதிஜோதி | அச்ஜோதி |
| 66. | | 15 | தொல்லி | சொல்லி |
| 67. | | 16 | பல்பாம | பலமாய |
| 68. | 45 | 1 | வந்து | (அடித்தல்) |
| 69. | | 9 | முதலிய | ( ,, ) |
| 70. | 46 | 8 | நின்றதாய் | நின்றதால் |
| 71. | | 9 | வாயல்மூலே | வாயவ்யமூலே |
| 72. | 47 | 5 | உருவாதமைந்தவர் | உருவாயமைமந்தவர் |
| 73. | | 28 | திக்கிமினு | திக்கிலு |
| 74. | 48 | 3 | அந்த | அதில் |
| 75. | | 8 | அபஸவமாய் | அபஸவ்யமாய் |
| 76. | | 26 | வகித்து | வரித்து |
| 77. | 49 | 1 | மாரத்வகம் | மார்க்கம் |
| 78. | | 10 | பிதாமக | பிரபிதாமக |
| 79. | | 12 | ஸ்வரூபமாராம் | ஸ்வரூபமா |
| 80. | | 18 | பிதுர்மேதமும் | பிதுர் கார்யமும் |
| 81. | 50 | 1 | | (சேர்) த்வா அஷ்டா க்ஷரபஞ் |
| 82. | | 4 | தேவருருமாய் | தேவருருவமாய். |
| 83. | | 7 | எந்தா | யந்த்ர |

| நிர் | பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 84. | 50 | 8 | அகத்தில் | ஜகத்தில் |
| 85. | | 27 | ளென்கிறல் | னென்கிற |
| 86. | 51 | 2 | ப்ரிதியாதவன் | ப்ரீதியாதலாலவன் |
| 87. | 52 | 14 | ப்ரீத்நமாய் | ப்ரீத்யர்த்தமாம் |
| 88. | | 16 | பஞ்சாக்சி | பஞ்சாக்நி |
| 89. | 53 | 6 | திறந்தா | திறத்தா |
| 90. | | 21 | வர்தம் | வ்ரதம் |
| 91. | | 28 | ரக்ஷித்தும் | ரக்ஷித்ததும் |
| 92. | | 29 | அஜாமிணளன் | அஜாமிளன் |
| 93. | 54 | 4 | மாகுகையும் | மாக்குகையும் |
| 94. | | 19 | பின்புறம் | பின்பும் |
| 95. | | 21 | அந்த என்னு | அந்த "த" என்னு |
| 96. | | 24 | இருபிறபுறச் | இருபிறப்புறச் |
| 97. | 55 | 26 | (40) | (60) |
| 98. | 57 | 4 | நால்வருச்சோ | நால்வருச்சரே |
| 99. | | 12 | பலன்கள் உறும் | பலன்கள் நீடு உறும் |
| 100. | | 23 | கலாவது | தலாவது |
| 101. | | 29 | ஜன்பலன | ஜன்மலக்ன |
| 102. | 58 | 8 | விளையன் | விணையன் |
| 103. | | 12 | பிணக்குங்கால் மிடத்தில் | தன்னுடன் பிணக்கும் கணவனிடம் |
| 104. | | 16 | கணவனுடன் தெய்வத்தை | கணவனும் அதிதியினிடத்தில் |
| 105. | | 30 | ஐநீடுறும் | நாட்டில்'ஐ' நீடுறும் |
| 106. | | 33 | ஊனம் | ஊனம் ரணம் |
| 107. | 59 | 1 | என்ருர் | என்ருல் |
| 108. | | 12 | நாட்டில் | நாடடல் |
| 109. | | 14 | உரியவாய் | உரிய தாய் |
| 110. | | 27 | யுவ்யமுமாம் | யுவ்வுமாம் |
| 111. | | 31 | இதன்கு | இதற்கு |
| 112. | 60 | 2 | போவிவரும் | போலிவரும் |
| 113. | 61 | 1 | க்ஷேத்ரகங்ளும் | க்ஷேத்ரங்களும் |

| நிர் | பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 114. | | 29 | காகுமென்றும் | காகும் |
| 115. | 62 | 9 | முற்றுமென்றும் | முற்றும் |
| 116. | 63 | 1 | மனத்தை | மானத்தை |
| 117. | | 5 | அதித் | அக் |
| 118. | | 6 | வழுஅக் | வழுத்தி |
| 119. | | 8 | உச்சர | உச்சரி |
| 120. | 65 | 16 | புருவமாயும் | உருவமாயும் |
| 121. | | 17 | கற்யாவதார | கல்கியாவதார |
| 122. | | 29 | உச்சிக்து | உச்சரித்து |
| 123. | | 30 | ராசியின் | மகரராசியின் |
| 124. | 66 | 8 | முதலியவரூற் | முதலியவற்ருல் |
| 125. | | 12 | மற்றும் சகல சம்பத்தும் பெற (சேர்) | (அடித்தல்) கோரிக்கையுள்ளவர் இந்த மஹாயந்த்ரத்தில் மகரராசியை தியானித்து அர்ச்சித்துப்பூஜித்து அதற்குரிய மந்திரமரகியத்வாதசாக்ஷரத்தை ஆயிரமுரு உச்சரிப்பாராகில் அவர் பிரார்தனை நிறைவேறும். திருடர் உபத்திரவமில்லாமலும், க்ஷத்ர சூன்ய, காற்று, சங்கை அணுகாமலிருக்கவும், துஷ்டர்களை வெல்லுதல் பொருட்டும், அபசவ்ய வித்யா லாபார்த்தம் பெறவும், மஹாவ்யாதிநீங்கவும் |

| நிர் | பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| | 66 | (13 வது வரி தொடர்ச்சி) | | |
| 126. | | 17 | ருத்ரனுலாலும் | பூமிபுத்ரனுதலாலும் ரண சூரனுதலாலும் |
| 127. | | 23 | (சேர்க்க) | ஒருவர் தனக்கிருக்கும் ரத்தஸ்ராவகம் இல்லாமலிருக்கும் பொருட்டும், ம்ருதப்ரஜையாகாமல் தீர்க்காயுசுடன் புத்திரோர்ப்பத்தி யாகும் பொருட்டும், வ்யாஜ்யம் த்வேஷ மில்லாமலிருக்கும் பொருட்டும், ஸ்திர’’ |
| 128. | | 24 | அவற்னு | அவர் |
| 129. | 67 | 11-13 | ஜெபிப்பாராதில் தாகம் பசி இந் நோய்களால் உண்டாகும் உபத்திரலம் நீங்கும் ......... எனலாம். | ஜெபிப்பாராகில் ஜெல பூரிதமான சாந்தி கலசத்தில் ஆவாகிக்கும் தெய்வம்பூரண அநுக்ரஹம் செய்யும். தாகம், பசி, சோகம் ஸ்லேஷ்மம், இவைகளினுலுண்டாகும் உபத்ரவம் நீங்கும், ஜெல கண்டம் நேரிடாது. |
| 130. | | 20 | பலம் | பலன் |
| 131. | | 27 | விதி | அதிதி |
| 132. | 68 | 3 | காகத்ரிமை | காய்த்திரியை |
| 133. | | 9 | ளௌஸக்ய | ஸௌக்ய |
| 134. | | 11 | காயத்ரிசை | காயத்ரியை |

| நிர் | பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 135. | | 21 | மண்ணென்றபடி | பண்ணென்றபடி |
| 136. | | 23 | மாதலாகலத்தில் | மானதலால் அதில் |
| 137. | 69 | 18 | தோள் | கோள் |
| 138. | | 19 | நாலுவேந | நாலுவேத |
| 139. | | 30 | தான்கு | நான்கு |
| 140. | 70 | 2 | கெரியரொஸல் | சூரிய ரெனல் |
| 141. | | 7 | பத்ரேண | புத்ரேண |
| 142. | | 27 | வாசொன்னூர் | வர் எனச்சொன்னூர். |

உ

ஸ்ரீராமாய பரப்ரம்மணே நம:

# இராமாவதார ஜாதகம்

ஆசாரிய மூர்த்தியாகிய முத்தண்ணுவவர்கள் திவ்ய ஸ்ரீசரணாரவிந்தங்களில் கிருஷ்ணன் சாஷ்டாங்க நமஸ்காரம். விஞ--—நான் ஸ்ரீமத் கம்ப ராமாயணம் கேட்டு வருகையில் பால காண்டத்தில் திருவவதாரப் படலத்திலிருக்குங் கவி களில்,

மேடமா மதிதிதி நவமி மீன்கழை
நீடுறு மாலைகர்க் கடக நீதிசேர்
ஒடைமா களிறனு னுதய ராசிகோள்
நாடினே காதசர் நால்வ ருச்சரே.

இந்தப் பாட்டின் தாத்பரியம் பெருஞ் சந்தேகமா யிருந்தது. அது புலப்பட அருணசலக் கவிராயர் செய்த நாடகக் கிரந்தத்தைப் பார்த்தேன். அதில் "ஒத்த கிரகங் களைல் வரும் பதினொன்றிலுச்சத்தி லைவருமேற" வென்று அவர் உரைத்திருக்கின்றனர். பால காண்டத் திற்கு உரை செய்து அச்சிட்டிருக்கும் புத்தகத்தையும் பார்த்தேன். அதிலும் "நால்வர் பதினொன்றிலும் மற்ற ஐவர் உச்சத்தினும்" என்று சொல்லி, "நீடுறு மாலை" என்றதற்கு, "மாலைப்போழ்திலவதரித்தனர்" எனவும் உரைத்திருக்கின்றது. வடமொழி வித்வான்களை வின வினன். அவர்கள் ஐவருச்சரெனவும், ராஜாவோடு சந்திர னும் நிற்பதாகவும், வான்மீக சுலோகத்திலிருப்பதாகவும், புதன் மேஷத்திலென வியாக்கியாதா சொல்லி யிருப்பதாக வும் சொல்லுகின்றனர். ஆயினு மெனக்கு இந்தப் பாவி லுள்ள ஐயம் முற்றுந் தீர்ந்ததில்லை நீவிரெனக்குப் பாடஞ் சொல்லுங்கால்—ஐயப்பட்டவைகளை—இரண்டு மூன்று மாதங்கள்கூட யோசித்துப் பயன் சொல்ல

வில்லையா? அதுபோலவே இப்பொழுதும் பயன் சொல்லு தல் வேண்டும்.

**சேஷா சாஸ்திரியார்**

விடை:—இளையோய், நீ கேட்பாயாக! நீ என்பாற் கேட்குஞ் செய்யுளானது அனந்த தாத்பரிய புஷ்டியுள் ளது. அதனை நீ வினவிய காலமுத லாறுமாத காலமா யாலோசித்தேன். அதிலெனக்குத் தோற்றிய உரை கூற, இலக்கிய இலக்கணத்துறை போயினோர், என் பேதமை யைக் கருதாது, பகவத் விஷய மாதலின் தயை செய் தங்கீ கரிப்பரென நம்பிப் புகுகிறேன்.

இந்தப்பாவினை முற்றும் உணர்வது அருமையாயினும்—ஸ்ரீராம மூர்த்தியினது திவ்யசரணார விந்தங்களைத் துணைக் கொண்டுளேனாதலால் அவரருளாலென் சிற்றறிவிற்குத் தெரிந்தவளவு சொல்கின்றேன்.

அப் பாடலுக்கு ஐவகை உரை இடலாம்.

1-வது. ஸ்ரீராமமூர்த்தியினது ஜனன மாசம், திதி, நக்ஷத்ரம், லக்னமும், நவக்ரஹங்களி நிலையும்.

2-வது லக்ன நவாம்சங்களும், நவக்ரஹங்களின் நவாம் சங்களும், ந்வாம்சஞ் சொல்லும் ஹேதுவும்.

3-வது. அவதார கடிகை, விநாடி, கலையும், நாழிகை சொல்லும் ஹேதுவும், வாரமும், தேதியும்.

4-வது. யந்திரம் வருமாறும், அதில் பீஜாக்ஷரம் அடைக் கும் விவரமும். அந்த யந்திரம் மஹா யந்திரமா மாறும், இன்னவின்ன மூல மந்திர தேவதை களோருருவாய் ஜனித்தனரென்பதும், தின சுத்தியின் பெருமையும்.

5-வது. இம்மஹா யந்திரத்தை இன்னவின்னவிடத்தி னாட்டுக வென்பதும், அவ்வாறு நாட்டிப் பூஜிப்பின்—இன்னவின்ன பயனுண்டா மென் பதும்

———

ஸ்ரீராமாயபரப்ரம்மணே நம:

# முதலாவது உரை

### கடவுள் வணககம்

உலகம் யாவையுந் தாமுள வாக்கலு
நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா
வலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசர ணுங்களே.

உரையாசிரியர் இஷ்டதேவதாப்ரார்த்தனே.
சூரிய நாராயண வணக்கம்.

பொன்னிரத் தினன் புவி புரந்திடப்
புயனிறத் தொடும் போர்ந்தனுண்
முன்னுரைத் தனன்கம்பனேர்கவி
முழுதமைத்தருண் முறையினுற்
சொன்னறைக்குல்ஞ் சூழுமெந்திரத்
தொகைவிரித்தன னுரைசொல
வெண்ணிறைப் பரனிலகுசோதிய
னினனடித்துணேயேத்துவாம்.

---

ஸ்ரீராம ஜாதக கம்பகவி

மேடமா மதிதிதி நவமி மீன்கழை
நீடுறு மாலைகர்க் கடக நீதிசேர்
ஓடைமா களிறனு னுதய ராசிகோ
ணுடினே காதசர் நால்வ ருச்சரே.

இந்தப் பாடலின் பதவுரை பலவாறு யிருப்பினும், ஒருவாறு தொகுத்துச் சொல்லுகின்றேன்.

### பதவுரை

நீதி-ஒழுக்கமானது, சேர்-சேர்ந்த, ஓடை-நுதலணியையுடைய, மா-பெருமைபொருந்திய, களிறு-யானையை, அனுன்-ஒத்தவனுகிய (இராமமூர்த்தியினது அவதாரகாலையில்), மா-பெருமைபொருந்திய, மதி-மாசமானது, மேடம்-மேஷமாயும், திதி-திதியானது, நவமி-நவமியாயும், மீன்-நக்ஷத்திரமானது, கழை-புனர்ப்பூசமாயும், கர்க்கடகம்-கடகமானது, உதயராசி-உதயமும், ராசிலக்கினமாகிய சந்திர லக்னமுமாயும், மால்-புதன், ஐ-ராஜ்யஸ்தானமாகிய பத்தாமிடத்திலும், கோள்-கேதுவிற்கு, நாடு-மிதுனமானது, இல்-வீடாயும், ஏகாதசர்-கக-இ உடையவர், நால்வர்-நான்குபேர், உச்சர்-உச்சஸ்தானத்திலும், நீடுறும்-பலமாக நிற்கும்.

ஏகாரம் தேற்றம். இத்தேற்றத்தின் பயன் இரண்டாமுரையிற் காண்க.

### கருத்து

சுவாமி அவதார காலம்-சித்திரை மாசம், நவமி திதி, புனர்ப்பூச நக்ஷத்திரம், கடக லக்னம், மேஷத்தில் சூரியன், புதன், மிதுனத்தில்-கேது, கடகத்தில்-குரு, சந்திரன், துலாத்தில்-சனி, தனுசில்-ராகு, மகரத்தில்-செவ்வாய், மீனத்தில்-சுக்கிரன், லக்ன நவாம்சமும், நவக்ரஹங்களின் நவாம்சமும், ஜனித்த நாழிகை-விநாடி-கலையும், வாரமும்-தேதியும், யந்திரமும், பூஜா நியமும் சொன்னுர்.

வினு—நீவிர் சொல்லிய பதவுரைக்கும், கருத்துரைக்கும் ஒரு சம்பந்த்த்தையுங்காணேமே! கருத்துரையிற் சொல்லியபடி யிந்தப்பாடலில் நவக்ரஹங்களெங்கே சொன்னுர்? நவாம்சம் சொற்றன ரென்பதற்கு ஹேது எங்கிருக்கிறது? பிறந்த நாழிகை, விநாடியும் சொல்லியிருக்கிருரோ? யந்திரமாவதென்னே? ஸ்தாபனமாவது எங்குளது? பூஜாநியமும் சொல்லியிருக்கிருரோ? பலனேயிப்பாடலில் சொல்லியதா யுத்தேசிக்கக்கூட இடங்காணுமே? இவற்றிற்கெல்லாம் ஆதாரமிப்பாடலில் தோற்றவேயில்லையே. ஆனுல் வேறேயெங்கேயாவது

ஆதாரமெடுத்துச் செல்லுகிறீரோ? முன் அற்பமாயிருந்த சந்தேகம் பலத்தது. இச்சந்தேகத்தை நீங்கள்தான் நிவர்த்திசெய்யவேண்டும்.

விடை—நீ கேட்டதெற்கெல்லா மிப்பாடலிலேயே பொருள் இருக்கின்றது ஒரு எழுத்தாவது பக்கத்தி லிருந்தெடுப்பதில்லை. கேள்.

இராகவனது ஜனனகால ஜாதகமானது :—சித்திரை மாதம், நவமிதிதி, புனர்ப்பூச நக்ஷத்திரம், கடகலக்னம்; இந்த நாலும் வெளிப்படையாய் தெரிகின்றன. இனி நவக் கிரகங்களும் வருமாறு கேள். "மதி மேடம்" என்றதால் சூரியன் மேஷத்தில் நின்றாரென்றும், அந்தமேஷமவருக்கு உச்சஸ்தானமானதால் அவருச்சரென்பதும், யாவருக்குந் தெரிந்ததுதானே? சந்திரனுக்கு இடஞ்செல்லவேண்டிய வர்—நக்ஷத்திரம் புனர்ப்பூசமென்றதாலும், உதயராசி கடகமென்ற விடத்தில் உதயமும், ராசியும் என்பது தோன்ற "ராசிகடகம்" என்றதாலும், சந்திரன் - மிது னத்திலோ - கடகத்திலோ வென்னுமையந்தீர ராசி "கட கம்" என்றதாலும் - சந்திரன் கடகத்தினின்றாரென் ருயிற்று.

புதனைச் சொல்லவேண்டியவர் "மாலை" என்ருர். மால் - புதனுனவர், ஐ - என்னும் ராஜ்யஸ்தானமாகிய பத்தாமிடத்தில் நின்ருரென்ருயிற்று.

வினு—பத்தாமிடம் ராஜ்யஸ்தான மென்றீரே அதெப் படி?

விடை—திருஷ்டாந்தம் :—

(ஜாதகாலங்காரம்)

மொழிந்திடு பாவபுண்ணியம் புவியாள்வோன்
முயன்று பட்டணங் கடாபித்தல்
பொழிந்திடுங் கரும மிரக்க மெய்ஞானம்
பூசனை மனைபிதாப் பவங்கள்
ஒழிந்திடு மினிய கருப்ப மூன் புடவை
இவை பத்தாமிடப் பெயரென்னே.

இப்பாடலில் "புவியாள்வோ"ன் என்றதால் - ராஜ்யஸ்தானம் பத்தாமிடமென்பதறிக.

கேதுவைச் சொல்லவேண்டியவர் "கோணுடில்", என்றதால் கோள் என்னுங் கேதுவிற்கு, "நாடு - இல்" எனவே நாடென்னும் மிதுனம் - வீடென்ருயிற்று.

வினு—கேதுவிற்கு "கோள்" என்னும் பெயர் எவ்விதமாய் வந்தது?

விடை—ஸங்க்யைக் குறிப்புப் பெயர். அஃது எவ்வாறெனில் :—ஏகமென்ரு லொன்றெனவும், வினையென்ருலிரண்டெனவும், குணமென்ருல் மூன்றெனவும், வேதமென்ருல் நான்கெனவும், புலனென்ருலைந்தென்வும், ரசமென்ருலாறெனவும், கடலென்ருலேழெனவும், திக்கென்ருல் எட்டெனவும், கோள் என்ருல்லொன்பதென்றும், அவதாரமென்ருல் பத்தென்றும் ஸங்க்யைப் பெயர் வழங்குவது. இந்த ஸங்க்யையால் "கோள்" என்னும் பதத்திற்கு 9 என்றும், க்ரஹங்களென்றும் அர்த்தமாதலின், இவ்விரண்டு தாத்பரியத்தானும், ஒன்பதாங்கோள் கேதுவானதால் "கோள்" கேதுவென்ருயிற்று.

வினு—மிதுனத்திற்கு "நாடு" என்னும் பெயர் எவ்வாறு வந்தது?

விடை—திருஷ்டாந்தம் :—

(சினேந்திரமாலை)

ஆடுவிற் காடரிவை யாமூ ரரிக்குமலை
நீடுதுலை மீன்மகர நீராறு - தோடலவன்
வாய்க்கா லெருது வயலாகுந் தேட்கிணறு
நீர்ச்சால் கெடுதி நிலைநீர்.

இப்பாடலால் மேஷமும், தனுஸும், ஆடுங், குதிரையுமாதலின் அது மேயுமிடத்தைப் பற்றிக் காடென்றும், சிங்கம் - மலை என்றும், துலாம், மீனம், மகரம் இம்மூன்றும் நீர் வாழ்வனவாதலின் நீரிலும், ஆற்றிலுமென்றும், கடகம் - நண்டாதலின் வாய்க்காலென்றும்,

தேள் - வயலிலென்றும்; கும்பம் கிணற்றிலென்றும் சொன்னர். இவற்றில் கன்னி மானிடமாயினும், தோணி யின் பேரிலிருப்பவளாதலின், சில வேளை நாட்டிலும், சிலவேளை நீரினுமுறுமென்ருயிற்று, அதனுல் மிதுனமே சேர்க்கையாதலாலும், ஆண் பெண் இணைபிரியாமனிற்ற லாலும், நாடென்னும் பெயருக்குரியதாயிற்று. ஆதலின் கேதுவிற்கு மிதுநம் வீடென் ருயிற்று, கேதுவிற்கு மிதுநம் வீடென்று சொன்னபோதே, ராஹு தனுசி லிருப் பாரென்பது யாவருக்குந் தெரிந்ததுதானே? அதனுற்ருன் ராஹுவிற்கு இப்பாடலில் இடஞ் சொல்லவில்லை.

இவ்வாறு சூர்ய, சந்த்ர, புத, கேது, ராஹுக்களைச் சொன்னர். மற்ற நால்வரும் வருமாறு கேள்? "ஏகாதசர் நால்வருச்சரே" எனவே நான்கு ஏகாதசர் நால்வருச்ச ரென் ருயிற்று. நான்கு ஏகாதசம் யாதெனில் - லக்னம் கடகம்: அதற்குமுதல் ஏகாதசம் ரிஷபம்; அந்த ரிஷபத்திற்கு ஏகா தசம் மீனமாதலா லது இரண்டாமேகாதசம்? அம்மீனத் திற்கு ஏகாதசம் மகரமாதலா லது மூன்ருமேகதசம்; அம் மகரத்திற்கு ஏகாதசம் விருச்சிகமாதலா லது நான்கா மேகாதசமெனவும்; இந்நான்கு ஏகாதசர் யாரெனில், முதல் ஏகாதசமாகிய ரிஷபத்திற்குடைய சுக்ரன் மீனத்தி லுச் சரெனவும், இரண்டா மேகாதசமாகிய மீனத்திற் குடைய குருவுக்கு கடகம் உச்சஸ்தாநமாதலால் அதி னின்ருரென்றும்; மூன்ருமேகாதசமாகிய மகரத்திற் குடைய சனிக்கு துலாம் உச்சஸ்தானமாதலால் - துலாத்தி னின்ருரென்றும், நான்காமேகாதசமாகிய விருச்சிகத்துக் குடைய செவ்வாய்க்கு மகரம் உச்சஸ்தாநமாதலால் அம் மகரத்தினின்ரு ரென்றும், சொல்வதற்காகத்தான் நிரை யாய் "ஏகாதசர்நால்வருச்சரே" என்ருர். இவ்வாறு ஏகாதசத்திற்கு ஏகாதசமென்று பார்ப்பதற்கு விதி எங்குள தெனில்:—

(சாதகாலங்காரம்.)

அறிதாதைக் கோன்பானுக் கொன்பா ருகு
மன்னைக்கே நான்கினுக்கு நான்க தாகுஞ்
செறிகனிஷ்டர்க் கொருமூன்றின் மூன்ற தாகுஞ்
சேட்டனுக்குப் பன்ஞென்றின் பன்ஞென் ருகு

முறுமாமன்றனக்குப் புத்திரர்க்கு மைந்திற்
கோரைந்தி ஞலு முயர் சகோதரங்க
ணறுங்குழ லங்கிசராசி யாண் பேண்ணேர்ந்தே
நவிலுவா யத்துகைபீ னளவே என்று

இதன்சாரம் :—ஒருவனுடைய தகப்பனுக்குப் பலன் பார்க்க வேண்டுமானல், ஒன்பதுக்கொன்பது என்றும், தாய்க்கு ஸஹோதரம் பார்க்க வேண்டுமானல், நாலுக்கு நாலு என்றும், தம்பிக்கு ஸஹோதரம் பார்க்கவேண்டுமானல். மூன்றுக்கு மூன்று என்றும், தமயனுக்கு பலன் பார்க்க வேண்டுமானல், பதிெனென்றுக்குப் பதிெனென்று என்றும், அம்மானுக்கும் புத்திரனுக்கும் பலன் பார்க்க வேண்டுமானல், ஐந்துக் கைந்தென்றும் பார்க்கவேண்டுமென்றார். இந்த விதிப்படி யிவரும் "ஏகாதசர்நால்வருச் சரே" என்றார்.

இவ்வாறு சுக்கிரன்-1. குரு-2. சனி-3. செவ்வாய்-4. முன் சொல்வியதைந்தும். ஆ-9-ம் ஆயிற்று. இவர்களில் குரு-1. சுக்கிரன்-2. சனி-3. செவ்வாய்-4. சூரியன்-5. இவர்கள் உச்சரெனவும்; சந்திரன்-ஸ்வக்ஷேத்ரரெனவும்; புதன், ராஹு, கேது இம்மூவரும் மித்ரக்ஷேத்ரரெனவும் சொன்னர்.

வினு:—கம்பர், வால்மீகர் சொன்னபடி நான் சொன்னேனென்றுரே வால்மீகரும் இவ்விதமாய் நவக்ரஹங்கள் சொற்றனரோ?

விடை:—வடமொழியில் எனக்கு அவ்வளவாய் பரிசயமில்லாவிடினும், பரிசய முள்ளவரையில், அந்த ஸந்தர்ப்பத்தில் இப்போது வழங்கி வருகிற :—

ततश्चद्वादशेमासे चैत्रेनावमिकेतिथौ ।
नक्षत्रेदितिदैवत्ये स्वोच्चसंस्थेषु पञ्चसु
ग्रहेषु कर्कटेलग्ने वाक्पताविन्दुना सह ॥

என்ற சுலோகத்தைப் பார்த்தேன். இந்த சுலோகம் இப்படியிருக்குமாகில் நவக்ரஹங்களும், நவக்ரஹ நவாம்சமும் ஏற்படாது.

ततश्चद्वादशेमासे चैत्रेनावमिकेतिथौ ।
नक्षत्रेदितिदैवत्ये वाक्यताविन्दुनासह ॥
ग्रहेपुकर्कटेलग्ने स्वोच्चसंस्थेपु पञ्चसु ।
प्रोद्यमानं जगन्नाथं सर्वलोकनमस्कृतम् ॥
कौसल्याजनयद्रामं दिव्यलक्षणसंयुतम् ।
विष्णोरर्धंमहाभागं पुत्रमिक्ष्वाकुनन्दनम् ॥
कौसल्याशुशु भेतेन पुत्रेणामिततेजसा ।
यथावरेणदेवानामदिति वेज्रपाणिना ॥

இப்படி யிருக்குமாயின் இந்தக் கம்பர் சொல்லியபடி ஸகலமும் சரியா யிருக்கும். இந்த நான்கு சுலோகங்களும், அஞ்சு அர்த்தங்களிலும் உபயோகப்படும். நீ அவற்றை அப்போதைக் கப்போது ஊக்கமாய்க் கேட்டுக்கொண்டு வா.

"ததச்சத்வாதசேமாஸே சைத்ரே நாவமிகே திதௌ நக்ஷத்ரே திதி தைவத்யே" என்ற மட்டில்—மாஸம், திதி, நக்ஷத்திரம், ஆயிற்று. இனி நவக்கிரஹம் வருமாறு கேள். "கர்க்கடேலக்னே" என்றதால் உதய லக்னம் கடகமென்ருயிற்று. "விந்துநா" என்றவிடத்தில் "விந்து—நா" எனப் பிரித்துக்கொள்க. அப்படிப் பிரித்துக் கொண்டால் "விந்து" புதனுவர் "நா" பத்தாமிடத்திலென்ருகிறது. "வி" என்ற உபஸர்கமானது, நீக்கற் பொருளைத் தருகின்றது. எனவே, இந்துவை விட்டு நீங்கினவன் புதனுதலின் "விந்து" புதனென்ருகிறது. அவ்வாறு "விந்து"வென்ற புதன் "நா"வென்பது வடமொழியில் பத்தாமிலக்கமாதலால், பத்தாமிடமாகிய மேஷத்திநின்ருரென்ருயிற்று. அல்லது விந்து புதன்—நா பத்தாதலின் பத்தாமிடத்திலென்ருகிறது.

ஹாக்ரஹேஷு என்றவிடத்தில் ஹாக்ரஹே—ஷு எனப் பிரித்து ஹா—எட்டாதலின், எட்டாவது கிரகம்

ராஹுவாதலால் ராஹுவானவர், ஷு—ஆருதலால், ஆரு மிடமாகிய தனுஸ்ஸில் நின்றாரென்றார். ராஹு தனுஸி லெனவே, கேது மிதுனத்திலென்றாகிறது. வால்மீகர் ராஹுவைச் சொல்லி, கேதுவைச் சொல்லாமல் விட்டு விட்டது போல், இக் கம்பரும் கேதுவைச் சொல்லி, ராஹுவை விட்டுவிட்டார்.

"வாக் பதாவிந்துனாஸஹா" என்றதால் குருவோடு சந்திரனும் சேர்ந்தாரென்றார். எனவே கடகத்தில் சந்திர னென்றாயிற்று. இவ்வாறு சந்திரன், புதன், ராஹு, கேது இந்நாலு கிரஹங்களுமாயின.

இனி பாக்கியிருக்கும் ஐவரும் வருமாறு கேள்.

"ஸ்வோச்சஸம்ஸ்தேஷுபஞ்சஸு" எனவே மீதி நிற்கும் ஐவரும் அவ்வவர்குரிய உச்ச ஸ்தானத்தில் நின்றா ரென்றாயிற்று. ஆதலால், சூரியன்—மேஷத்திலும், குரு—கடகத்திலும், சனி—துலாத்திலும், குஜன்—மகரத்திலும், சுக்கிரன்—மீனத்திலும் நின்றாரென்றார்.

இவ்வாறு கம்பர்போலவே—வால்மீகரும் சொன்மை காண்க.

முதலாவது உரை முற்றும்

---

## இரண்டாவது உரை.

---

இந்தவுரையால் நவாம்சஹேதுவும். லக்னநவாம்ச மும், நவக்ரஹங்களின் நவாம்சமுஞ் சொல்லுகின்றேன்.

வினா:—நவாம்சமாவதியாது? அஃது எவ்வாறு பார்ப்பது?

விடை:—ஒரு நக்ஷத்திரத்திற்கு நாலுபாதமெனவும், ஒரு ராசிக்கு ஒன்பது பாத மெனவும் பார்ப் பது. அதற்கு விதிசொல்வேன் கேள்.

மேஷ விருச்சிகங்களுக்கு - குஜன் அதிபதியென்றும், ரிஷப துலாத்திற்கு - சுக்ரன் அதிபதியென்றும், மிதுந கன்னிக்கு - புதன் அதிபதியென்றும், கடகத்திற்கு - சந்த்

ரன் அதிபதி யென்றும், ஸிம்ஹத்திற்கு - சூர்யன் அதிபதி யென்றும், தனுர் மீனத்திற்கு குரு அதிபதியென்றும், மகரகும்பத்திற்கு - சனி அதிபதி யென்றும், மேஷராசிக்கு மேஷாதி தனுஸுவரையில், ஒன்பது பாதத்திற்கும் ஒன்பது ராசியாய் எண்ணிப்பார்ப்பது. மேஷ ஸிம்ம தனுஸு, ரிஷப கன்ய மகரம் - மிதுன துலா கும்பம், கர்க்கி விருச்சிக மீனம், இவற்றில் மேஷ ராசிக்கு மேஷாதிதனுஸு வரையிலென்றும், ரிஷபத்திற்கு-மகராதி கன்னி வரையிலென்றும், மிதுனத்திற்கு - துலாதி மிதுனம் வரையிலென்றும், கடகத்திற்கு - கடகாதி மீனம் வரையிலென்றும், எத்த த்ரிகோணத்திலும் சராதி உபயாந்தமாய்ப் பார்ப்பதாம்.

வினு :—இந்த நவாம்சம் இந்த பாடலில் எங்கே சொன்னுர் ?

விடை :—"**மீன்கழை**" என்றவர் ராசி கடகமென்றதால், புனர்பூசம் நாலாங்காலில் சந்த்ரன் நின்றனரெனவும், அதனுல் சந்த்ர நவாம்சம் கடகமென்றும் ஆயிற்று. சந்த்ரனெருக்ரஹத்திற்கு நவாம்சஞ் சொல்லியதால், மற்ற எண்மருக்கும் நவாம்சஞ் சொல்லி யிருப்பாரென்று ஆலோசிக்கப்பட்டது. அதற்கு இவவாறு சில ஹேதுக்கள் காணப்பட்டன. அவை யாவையெனில்? மேடமதி எனச்சொல்ல வேண்டியவர் "**மேடமாமதி**" என்று 'மா' வை இடையிற் சொல்லியதாலும் புதனுக்கருகில் "ஐநீடுறும்" என்றதாலும், லக்னத்திற்கும், சந்திரலக்னத்திற்கும் "நீதி-சேர்" என்றதாலும் 'கேதுவிற்கு அருகே - "நாடி" என்றதாலும், "ஏகாதசர் நால்வருச்சரே" என்றதாலும் இவைகளெல்லாம் நவாம்சங் குறிக்கவே சொற்றனரென் ருலோசிக்கப்படுகின்றன. இவற்றுள் முக்யஹேது "ஐ நீடுறும்" என்று சொல்லியதால் ஐ நீளுமென்ருயதாலும் நீ-யும், தி-யும், சேரென்றபோழ்தே அக்ஷர

கணித விதிப்படி சொல்லி யிருப்பரென, ஆலோசிக்க இட முண்டாயிற்று.

விஞ:—இந்தஹேதுவாலெல்லாம் நவாம்சம் எவ்வாறு காணலாம்?

தமிழில் அக்ஷரகணித விதியுமுளதோ?

விடை:—நெடுநாளைக்குமுன் "குமாரசாமியம்" என்னும் ஜோதிஷ நூலைப் பார்த்தேன். அதில் அஷ்டகவர்க்கத்தை அக்ஷரகணித விதியிற் சொல்லியிருந்தார். அதுபோலவே யிருக்குமென்று ஆலோசித்தேன். அப்போது தமிழில் அக்ஷரகணிதவிதி யுண்டென்று மாத்திர மேற்பட்டதே யன்றி - இவ்விதமாய்ப்பார்ப்பதென்று ஏற்படவில்லை. இதிலெனக்குத் தோற்றியதைச் சொல்வேன்.

சூர்யனுக்கு 'மா' என்கிற எழுத்தில்-ம்-என்னுமெய்-10—அதிலேறயிருக்கும் ஆகார உயிர் 2-ஆ 12. இந்த-12-ல்-9-போக-மீதி-3. இந்த-3 நீடுறுமென்னும் விதிப்படி மூன்றினிளம் மேடமுதல் மிதுன பர்யந்த மாதலின் சூரியனுக்கு மிதுனம் நவாம்சமென்றும், புதனுக்கு-ஐ நீடுறுமென்றதால், உயிரில்-ஐ-9 மேடமுதல் ஒன்பதின் நீட்டம் தனுஸாதலின் புதனுக்கு தனுர் நவாம்ச மென்றும், லக்நத்திற்கும் நீ-தி-சேரென்றதால் நீ-என்பதில்-ந்-என்கின்ற மெய்-8-அதிலேறியிருக்கும்-ஈகார உயிர்-6-ஆ -12. இதுவும் தி என்பதில்-த்-என்னும் மெய்-7-அதிலேறி நிற்கும் இதர உயிர்-3-ஆ -10, சேரென்ற விதிப்படி இவ்விரண்டு தொகையையுஞ் சேர்ப்பதால், வருவது 22 இந்த இருபத்திரண்டில் 18 போக பாக்கி-4-ஆதலின், நீடுறுமென்ற விதிப்படி நாலின் நீட்டாவது, மேஷமுதல் நாலாவது ராசி கடகமாதலால், லக்கத்திற்கும், சந்த்ரனுக்கும், கடக நவாம்சமென்றும்; கேதுவிற்கு நவாம்சம் சொல்ல வேண்டியவர்-அருகே 'நாடி' என்றதால்-நா-என்பதில்-ந்- என்னும் ஒற்று, 8-அதிலேறியிருக்கும் ஆகார உயிர்-2.ஆ 10. டி-என்பதில்-ட்-என்னும் ஒற்று-5-அதிலேறியிருக்கும் இகர உயிர்-3 ஆ 8. முன்தந்த 10யும் சேரென்ற

விதிப்படி சேர்க்க, வருவது 18. இப்பதினெட்டில் ஒன்பது போக பாக்கி-9-ஆதலின் நீடுறுமென்ற விதிப் படி-மேஷமுதல் ஒன்பதில் நீட்டு தனுஸாதலின், கேது விற்கு தனுர் நவாம்சமென்றும், கேதுவிற்கு தனுர் நவாம் சமென்றதால், ராஹுவிற்கு மிதுந நவாம்சமென்றும்; இவ்வாறு சூர்ய நவாம்சமிதுனம், சந்திர நவாம்சம் கடகம், புதநவாம்சம் தனுசு, கேது நவாம்சம் தனுசு ராஹு நவாம்சம் மிதுநம், லக்க நவாம்சம் க்டகம், ஆக ஆறு நவாம்சமும் சொல்லியாயிற்று. பாக்கியிருக்கும் நால்வருக்கும் நவாம்சஞ் சொல்வன்.

“ஏகாதசர் நால்வருச்சரே” என-ஈற்றில் தேற்றே காரமாய்ச் சொல்லியதால், அதிக உச்சமொன்ருயிற்று. அதி உச்சமென்றது பாகத்தைக் காட்டியது.

அஃதெவ்வாறெனில்?

गजवृषभमृगाङ्गनाकुलीर
झषवणिजौचदिवाकरादितुङ्गाः ।
दशशिखिमनुयुक्ति धीन्द्रियांशैः
त्रीनवकविंशतिभिश्चतेस्तनीचः ॥

இந்த சுலோகத்தின் தாதபாயகாவது-மேஷம் சூர்ய னுக்கு உச்ச ஸ்தானமாயினும் அதன் பத்தாம் பாகம் அதி உச்சமெனவும் ரிஷபம்-சந்நரனுக்கு உச்ச ஸ்தாநமாயினும், அதின் ஐந்தாம் பாகம் அவர்க்கு அதி உச்சமெனவும், குஜனுக்கு மகரம் உச்ச ஸதானமாயினும், அதின் இருபத் தெட்டாம் பாகம் அவர்க்கு அதி உச்சமெனவும், புதனுக்கு கன்னி உச்சஸ்தானமாயினும், அதன் பதினைந் தாம்பாகம் அவர்க்கு அதிஉச்சமெனவும், குருவிற்கு கட கம் உச்சஸ்தானமாயினும், அதன் ஐந்தாம்பாகம் அவர்க்கு அதி உச்சமெனவும், சுக்ரனுக்கு மீனம் உச்சஸ் தானமாயினும், அதன் இருபத்தேழாம் பாகம் அவர்க்கு அதி உச்ச மெனவும், சனிக்கு துலாம் உச்சஸ்தான மாயினும், அதன் இருபதாம்பாகம் அவர்க்கு அதி உச்ச

மெனவும், இவ்வுச்ச ஸ்தானங்களுக்கு ஏழாம் ராசி நீசஸ்தானமென்றும், அவ்வவர் நீசஸ்தானங்களில் அதி உச்ச பாகத்திற்குத் தக்கபாகங்கள் அதிநீசமெனவும் சொன்னர் இந்த விதிப்படி :—

முதல் ஏகாதசம் ரிஷபத்திற்குடைய சுக்ரர் மீனம் இருபத்தேழாம் பாகத்திற்கு, ரேவதி நாலாங்காலில் மீன நவாம்சத்தில் நின்ருரென்றும் சொன்னர்.

இரண்டாம் ஏகாதசம்:—மீனத்திற்குடைய குரு கடகம் ஐந்தாம்பாகத்திற்கு பூசம் முதற்காலில் சிம்ஹநவாம்சத்தில் நின்ருரென்றும் சொன்னர்.

மூன்ரும் ஏகாதசம் :— மகரத்திற்குடைய சனி துலாம் இருபதாம் பாகத்திற்கு ஸ்வாதி நாலாங்காலில் மீன நவாம்சத்தில் நின்ருரென்றும் சொன்னர்.

நான்காம் ஏகாதசம்:—விருச்சிகத்துக்குடைய குஜன் மகரம் இருபத்தெட்டாம் பாகத்திற்கு அவிட்டம் ரெண்டாங்காலுக்கு கன்யாநவாம்சத்தில் நின்ருரென்றும் சொன்னர்.

| | |
|---|---|
| எனவே-லக்ந நவாம்சம் கடகம் | சுக்ர நவாம்சம் மீனம் |
| சூர்ய நவாம்சம் மிதுனம் | சனி நவாம்சம் மீனம் |
| சந்திர நவாம்சம் கடகம் | ராஹு நவாம்சம் மிதுனம் |
| குஜ நவாம்சம் கன்னி | கேது நவாம்சம் தனுஸு |
| குரு நவாம்சம் சிம்ஹம் | என்ருயிற்று. |

விஞ:—லக்னத்திற்கு நவாம்சம் சொல்லியதால் பலன் யாது ?

விடை:—லக்ந நவாம்சம் எந்தநிறமோ அந்த நிறம் ஜாதகன் அடைவனென்றும், சந்த்ர நவாம்சம் எந்த ஜாதியோ ஜாதகன் அந்த ஜாதியென்றும், பலவானன க்ரஹம் லக்ந நவாம்சத்திலிருக்கும் பக்ஷத்தில் அந்த பலவானுக்குத்தக்க வர்ணம் அடைவனென்றும், ராசிலக்னம்போன்று சரீராக்ருதியிருக்கு மென்றும், சாஸ்த்ர விதியாதலின் லக்ன நவாம்சம் சொன்னர்

இதற்கு உதாரணம்.

लग्ननवांशकमानतनूस्या
द्वीर्ययुतग्रहतुल्यनतुर्वा ।
चन्द्रसमेतनवांश सवर्ण
कादिविलग्नविभक्तभगात्रः ॥

இதன் கருத்து முன்சொன்னது தான்.

இந்தச்லோகத்தின் தாத்பர்யப்படி இந்தகடகம் பாதிரிப்பூவர்ணமாயும், அதை சனியும், செவ்வாயும் பார்த்தாலும் கடவுள் நீலநிறமுற்றனர்.

கடகம்-பாதிரிப்பூவர்ண மென்பதற்கு உதாரணம்

रक्तश्वेतश्शुकतनुनिभः पाटलोधूम्रपाण्डु-
चित्रः कृष्णः कनकसदृशः पिङ्गलः कर्वुरश्च ।
बभ्रुः स्वच्छः प्रथमभवना द्येषुवर्णाप्लवत्वं
स्वस्यांशख्यादिनकरपुताद्भाद्वितीयश्चवेसी ॥

சந்த்ரநவாம்சம் கடகராசியாதலால் அந்த கடகத்திற்குடைய சந்த்ரன் தாபஸக்ஷத்திரிய ஜாதி யாததால் இருவரும் தாபஸ க்ஷத்திரிய ராகவே யவதரித்தார்.

சந்த்ரன்-தாபஸக்ஷத்ரியன் என்பதற்குதாரணம்.

नृपाद्यास्तपनश्चन्द्रस्तापसक्षितिपादयः ।
वक्रोविप्रादयस्सौम्यः वैश्याद्याः देवमन्त्रिणः ॥

வினா:—லக்னத்தில் சந்த்ரனும் குருவும் பலவான்களாய் நிர்க்க, அவர் நிறமமையாமல் லக்னத்தைப் பார்த்த சனி, செவ்வாய்களுடைய நிறமமைந்த தென்னே?

விடை:—சனிக்குச்சந்த்ரனும், ராஜாவுக்குச் செவ்வாயும், பெருஞ்சத்ருக்களாதலால் இவர்கள் நிறம்மாறி அவர்கள் நிறம்மேலிட்டது. அஃதெவ்வாறெனில்; ஓர் கண்ணுடியில் தெளிவும் மெதுமுதலிய குணங்களும் தன்னிடத்திருப்பினும், எதிரிலிருக்கும் ரத்தம் முதலிய வர்

ணங்களைத் தன்னுட் காட்டுவதுபோல், சனி, செவ்வாய் களுடைய நிறம் லக்னத்தில் மேலிட்டது.

சனிக்கும் குருவிற்கும்

சந்த்ரனும், செவ்வாயும் பகையென்பதற்குதாரணம்.
(சினேந்திரமாலை)

தூதுவர்க்கு வெய்யோன் சுடரோன் மதிபுதற்குப்
பீதகற்குச் செவ்வாய் பெரும்பகையாம்-நீதியால்
புந்திபுகர் பொன்னெழிய வெல்லாம் பகைசனிக்குத்
தந்தநிலம் பகையாய்ச்சாற்று.

வினா:—ஸ்தூலத்தில் லக்கமும், நவக்ரஹங்களும் சொல்வதுதான் உலகத்தில் வழக்கம். கம்பர் ஸ்தூலத்திற்சொன்னதுபோலவே நவக்ரஹங்களுக்கும், நவாம்சம் சொன்ன பயன் யாது?

விடை:-சோதிட நூலில் ஒருக்ரஹத்திற்கு ஷட்வர்க்க பலன் பார்ப்பது வழக்கம். அதிலும் ராசி நவாம்சம் முக்கியமாதலால். ராசியையும் நவாம்சத்தையுஞ் சொன்னார். ராசியாலெந்தபலன் பார்ப்பினும், நவாம்சம் பாராவிடில் பிசகிப்போய்விடும். அதனாற்றான், ராசியும் நவாம்சமுஞ் சொல்லவேண்டிய விதிப்படி சொன்னார்.

அதற்கு த்ருஷ்டாந்தம்

भावफलदीपिका श्लोकम् ॥
अर्थास्तिकथये द्विलग्नशशिनेः प्रावल्यतः खेचरै :
कर्मस्थैः पितृमातृशार्तृवसुहृत् भ्रात्रादितस्त्रीधनम् ।
भृत्याद्वादिननाथलग्नशशिनामध्ये वलीयांस्ततः
कर्मेशस्थनवांशराशिपवशाद्वृत्तिं जगुस्तदितः॥

இந்த சுலோகத்தின் ஸாரம்:—ஒரு ஜாதகனுக்கு ஜீவனம் பார்க்கவேண்டுமானல் லக்னம்-1-சந்திரன்-2

சூர்யன்-3. இவர்களில் யார்பலவானே அந்த பலவான் களுக்கு பத்தாமிடத்துக் குடையவன்-எந்த நவாம்சம் ஏறியிருக்கிருனே, அந்த நவாம்சாதிபனல்-சீவநம் சொல்லவேண்டுமென்றும். 3-அம்சேசரும் பலவான்களா யிருப்பாராகில் பூர்ணபலமென்றும், பலஹீனராயிருப்பா ராகில் பலஹீன ஜீவநம் செய்வனென்றும், பத்தாமிடம் எந்த திக்கோ அந்த திக்கில் ஜீவனங்கிடைக்குமென்றும் அந்நியன் பலத்திருப்பானுகில் அந்நிய தேசத்தில் ஜீவநங் கிடைக்குமென்றுமாம். மற்றும் ஸஹோதரங்களும், கல் யாணங்களும், ஆயுளும், நவாம்சத்தினுலேயே சொல்ல வேண்டு மாதலின் நவாம்சமும் சொன்னுர்.

நவாம்சங்களுக்கு வேருேர் புறநடை சொல்வேன்:-

காலம் என்கிற புருஷனுக்கு 12 ராசியும் அவயவ மெனவும், அதிலேறியிருக்கும் நவக்ரஹங்களும் நவத் வாரமெனவும், ஸ்தூல லக்கனமே சரீரமெனவும், நவாம்ச லக்னமே ஜீவனென்றும் நவாம்ச நவக்ரஹங்களும் நவத் வாரத்தின் தொழிலெனவும், ஹோராலக்ன மிரண்டு உறக்க மும் விழிப்பு மெனவும், த்ரேக்காணம் மூன்றும் ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரமென்றும், த்வாதசாம்ச லக்னம் பன்னிரண்டும், பன்னிரண்டுகலையெனவும், த்ரிசாம்சலக் னம் முப்பதும் முப்பதுநாளென்றும், இவை ஷட்வர்க்க பலமென்றும் சொல்வது. இவ்விருவகை வாக்யங்களி லும்-ராசி நவாம்சம் முக்யமாதலின் இவ்விரண்டையுஞ் சொன்னுர்.

நவக்ரஹங்களும், நவத்வாரங்களென்பதை விரித்துக் கூறுகின்றேன் :—

தலையிடத்துள்ள ஏழு த்வாரங்களும் சூர்யன் முதற் சனியீருன ஏழு க்ரஹங்களாதலின், இவ்வேழும் முக்ய க்ரஹங்களென்றும், இவ்வேழுக்ரஹங்களாலமைந்த சிர ஸுக்கு வராங்கமென்றும் பெயர்; அவற்றுள்-சூர்யனும், சந்த்ரனும் கண்கள் என்பது ச்ருதிப்ரஸித்தம். குஜனும், புதனும், நெருப்புங் காற்றுமாதலானும், நெருப்பு காற் றிற்கு ஸாரதியாதலானும், இவ்விருவரும் ஒருசார் நண்ப

ராதலின் காதுகளெனவும், சனி சுக்ரரிருவரும் ஜனிப்பும், மறைக்கோளுமாதலானும், இவ்விருவரும் ஒருசார் நண்ப ராதலானும்-நாசித் துவாரங்களெனவும், குரு வாகீசரென வும், ஜீவனெனவும் பெயர் பெற்றமையின் நாவெனவுஞ் சொல்ப. ராஹு, கேதுக்கள்-மல ஜல த்வார ரூபமாய் ஒரு தொகுப்பாய்க்கொள்ளும் அன்னபானாதிகளே இரண் டாயதென்று லோகப்ரஸித்தம். இவ்விராஹு கேதுவின் தொழிலாகிய மலஜலம் விஸர்ஜனம் சுருங்கினும், மிகினும், தலையிடத்தே நிற்கும் ஸப்த துவாரங்களின் தொழிலெ லாம் ஓய்ந்துவிடுதல் பற்றியே இவ்விராஹு கேதுக்களை மற்ற க்ரஹங்களிலும் வலியரென்றூர்.

வினு:—இந்நவாம்சத்தை வால்மீக ரெங்கே சொன்னூர்;

விடை:—"விந்துருக்ரஹேஷு" என்று 'விந்து' புத னுவர் 'நாஸஹாா' (ராசியில்) பத்திலிருப்பதோடுகூட "க்ரஹே' (நவாம்ச) வீட்டில் 'ஷு' ஆருமிடத்திலென்று சொல்லியதால் கடகத்திற்காருமிடமாகிய தனுஸில் புதன் எனவும், 'ஸஹா' என்றதால் 'ஹா' என்னும் எட்டாவது எண்ணிக்கையையுடைய ராஹுவிற்கு 'ஸ' ஏழுலக்கம் நவாம்சமென்றூர். இவ்வேழினை யெவ்வாறு பார்ப்ப தெனில், 'ஹா' என்னுமெழுத்தால் ராஹுவைச் சொல்லி யதால், அதற்கு உடன் முந்தினவெழுத்து 'ஸ' ஆதலின், ராஹு நிற்குமிடத்திற்கு ஏழாமிடமாகிய மிதுனம் ராஹு விற்கு நவாம்சமென்றூர், எனவே, கேதுவுக்கு தனுர் நவாம்ச மென்பது பெற்றும். ஆகையால், வால்மீகர் ராஹுவிற்கு நவாம்சம் சொல்லி கேதுவை விட்டது போல், கம்பரும் கேதுவைச் சொல்லி ராஹுவை விட்டார்.

'வாக்பதாவிந்துருஸஹா-என்று ராஜாவோடு சந்தி ரனும் (கடகத்தில்) நின்றூரென்றும், நக்ஷத்திரம் புனர்பூச மென்றும் சொன்னதால், புனர்பூசம் நாலாங்காலிற்கு-சந்திர நவாம்சம் கடகமென்றூயிற்று.

"கர்கடேலக்னேஸ்வன" என்று லக்னத்திற்கு 'ஸ்வ' என்றதால் கடகமே நவாம்சமென்றும், இப்பதத்தினிறுதி

யில் 'வ' என்று நாலைக் குறிப்பித்ததால், மேஷம் முதல் நாலாம் ராசி கடகமாதலின், இவ்விரண்டு ஹேதுக்களி னுலும் லக்ன நவாம்சம் கடகமென்றும் சொன்னதால் லன்ன நவாம்சம் கடகம், சந்த்ர நவாம்சம் கடகம், புத நவாம்சம் தனுஸு, ராஹு நவாம்சம் மிதுனம், கேது நவாம்சம் தனுஸு என்றாயிற்று.

இனி பாக்கியிருக்கும் ஐவருக்கும் நவாம்சம் காண் பிப்பதற்காகவே "ஸ்வோச்சஸம்ஸ்தேஷு பஞ்சஸு" என்றார். ஸ்வகீய வுச்சமெனலால் பரமோச்சமென்றா யிற்று. அவ்வவர் உச்சஸ்தானங்களில் பரமோச்சமென்று பாகத்தைக் குறிப்பித்ததால், சூர்யனுக்கு மிதுனம், ராஜா வுக்கு சிம்மம், செவ்வாய்க்குக் கன்னி, சனிசுக்ராளுக்கு மீனம் என முன்பே கூறிப்போந்தனம்.

வினு:—கம்பர் மாஸக்குறிப்பால் சூர்யனைச் சொல்லி, பின்பு சொல்லாமல் விட, வால்மீகர் மாத்திரம் மாஸக் குறிப்பால் உச்சரெனச் சொல்லி பின்பு சொல்லியதென்ன?

விடை:—பரமோச்சக் கணக்கில் சேர்க்காவிடில், சூரிய னுக்கு மேஷம் பத்தாம் பாகம் மிதுந நவாம்சமென ஏற்படமாட்டாது. அது ஏற்பட "ஸ்வோச்சஸம்ஸ்தேஷு பஞ்சஸு" என சேர்த்துக் கூறினர்.

வினு.—சூரியனுக்கும், புதனுக்கும், ஒவ்வோரெழுத் தால் நவாம்சம் சொன்னவர் லக்னத்திற்கும் சந்திர லக்னத் திற்கும், கேதுவிற்கும், இரண்டிரண்டெழுத்தாற் சொல்லி யதென்ன?

விடை:—சூர்யனும், புதனும் ஒவ்வொரு க்ரஹமாதலின் ஒவ்வோரெழுத்தாற் சொன்னார். லக்னமும், சந்த்ரலக்ன மும் இரண்டாதலானும், கேது முன்னிலையில் ராஹு விற்கு நவாம்சம் சொன்னமை தோன்றவும், இரண்டிரண் டெழுத்தாற் சொன்னார்.

வினு:—சுக்ரன், குரு, சனி, குஜன், இவர்களுக்கு பாகப் படுத்திச் சொன்னது போல்-மற்றவர்களுக்கும் அவ்வாறு கூருததென்ன?

விடை :—அவர்களுக்கும் ராசிபாக கலை பிரித்துச் சொல்வேன் கேள்,

1. சூர்யனுக்கு-'மா' என்றதால்-பாகம் (10) கலை (12) எனவும்,

2. சந்த்ரனுக்கு-'நீதி' என்றதால் ராசி (6) பாகம் (3) கலை (22) எனவும்,

3. கேதுவிற்கு-'நாடி' என்றதால்-ராசி (2) பாகம் (6) கலை (12) எனவும்,

4. ராஹுவிற்கு 'ராசி' (8) பாகம் (6) கலை (42) எனவும்,

5. புதனுக்கு 'ஐ' என்றதால் பாகம் (27) கலை (9) எனவுங் கணிதவிதி.

இரண்டாவது உரை முற்றிற்று.

## மூன்றாவது உரை

---

இவ்வுரையால் ஸ்ரீராமர் பிறந்த

நாழிகை,விநாடி,கலை,தேதி,வாரமும் சொல்லப்படுகின்றன.

"களிறனுன் உதயராசி கோள்நாடில்" எனவே ராமமூர்த்தியினுடைய ஜனன ராசி, க்ரஹங்கள் இவற்றையாலோசிக்குமிட மென்றாயிற்று. அவ்விடமென்பது நாழிகை, விநாடி கலையையன்றி வேறில்லாமையின் அவையெங்குள வென்றாலோசிக்கலாயிற்று. 'உதயம்' என்றமையின் சூர்யோதயமெனவும், 'ராசி' என்றமையின் (புனர்பூச நக்ஷத்திர நாலாம்) ராசியெனவும், 'கோள்' என்றமையின் புதனெனவும், இவற்றை முன்கூறிப் பின்னர் 'நாடில்' என்றமையின் இவற்றைச் சொல்லியபின் சொன்னுரைரென்பதற் கிடமுண்டாயிற்று. அதற்காதாரமெங்ஙன மென்னில் "மேடமாமதிதிதி நவமிமீன்கழை நிடுறுமாலை" என்ற அளவும் முற்கூறிய மூன்றுமாயிற்று. நாழிகை, விநாடி, கலைகளை யவற்றின் பிற்கூறினாரென் றாலோசிக்கலாயிற்று.

வேருெரு விதத்தாலும், முன்பின் தொடர்ச்சியாலும், பொருளாலும், காலவகை யிடவகையாலும், விரோத மின்றி நாழிகை முதலியவற்றைக் குறிக்க நிற்பது 'ஒடைமா' என்னும் பதம், இப்பதத்தால் எவ்வாறு நாழிகை அறிவதெனில், 'ஒடைமாகளிறஞன் உதயம்' என்பதை களிறஞன் உதயம் ஒடைமா என அங்வயித்துக் கொள்க. அவ்வாருயின் ஒ உயிரில் பதினென்று 'டை', என்பதில் 'ட்' மெய்யோற்றில் ஐத்து-அதிலேறியிருக்கும் ஐகார உயிர் ஒன்பது. இவற்றை முறையே ஐந்து ஒன்பது என வைக்க ஐம்பத்தொன்பது. 'மா' என்பதில் 'ம்' மெய் பத்து அதிலேறியிருக்கும் ஆகார உயிர் இரண்டு ஆக பன்னிரண்டு. இம்மூன்று வகையில முதல் 'ஒ'வில் வந்த பதினென்றும் கலையெனவும், 'டை'யில் வந்த ஐம்பத்தொன்பதும் விநாடியெனவும், 'மா'வில் வந்த பன்னிரண்டும் நாழிகையெனவும் கொண்டால், உதயாதி பன்னிரண்டு நாழிகை, ஐம்பத்தொன்பது விநாடி, பதினெரு கலைக்கு ஸ்வாமி ஜனித்தாரென்ரும்,

வினு :—இவ்விடத்தில் வால்மீகர்-நாழிகை, விநாடி, கலையை யெங்கே சொன்னுர் ?

விடை :—ததச்சத்வாதசேமாஸே என்பதை தத :-ச-த்வாதசே மாஸே எனப் பிரித்தால் நடுநின்ற த்வா என்பதனுல் இரண்டிடமென்றும், இரண்டெழுத்தைச் சேர்ப்பதென்றும், குறிப்பித்ததாகக் கொண்டால், முதல் பதத்திலுள்ள முதல் 'த' ஆறு, இரண்டாம் 'த' ஆறு, இவ்விரண்டையும் சேர்க்க வருவது பன்னிரண்டு தத : ச்ச என்பதிலுள்ள 'வ' ப்ரத்யயமானது உம்மைப் பொருட்டாதலால் அதுபோய் கடையில் நிற்கும் பதத்திலும் சேரென்ருயிற்று. இதுநிற்க த்வாதசே என்பதில் 'த' எட்டு, 'சே' ஐந்து. இவ்விரண்டையும், ஸம்ஸ்க்ருத கணித மூறைப்படி வைக்கவருவது ஐம்பத்தெட்டு. மாஸே என்பதோடும், முற்குறித்த 'வ' ப்ரத்யயத்தைச் சேர்க்க-மாசேச என்ருயதால் இதையுஞ் சேரென்பதாயிற்று. சேர்ப்பதெவ்வாறெனில், 'மா' ஐந்து 'ஸே' ஏழு-இவ்விரண்டையுங் கூட்டவருவது பன்னிரண்டு. இத

ளுல் 'தத:என்பதில் அக்ஷரகணிதத்திளுல் வந்த பன்னி ரண்டுங் கலே எனவும், 'தசே', என்பதில் வந்த ஐம்பத் தெட்டும் விநாடியெனவும், 'மாஸே' என்பதில் வந்த பன்னிரண்டுப் நாழிகை யெனவும், உதயாதி (12) நாழிகை (58) விநாடி-(12) கலேக்கு, ஸ்ரீராமர் அவதரித்தாரென்று, கம்பருக்கு இவர் ஒரு விநாடி குறைந்தும், ஒரு கலே யேற்றியுஞ் சொன்ஞர்.

இனி தேதி வருமாறு

தேதி கணிப்பதற்கு மாஸ ப்ரமாண மறியவேண்டிய தவசியகமாதலின் அதைச் சொல்வன்.

மாஸ ப்ரமாண விகடிகா வாக்யம்

சுலோகம்

ஸ்ரீலேசோமானலக்ஞேவி விதகரதனு ஸ்ரீரதாசை
—லதான
ஸ்வர்கத்வாரோன் முகாஸ்யுர்பவசரதிமயாதஞ்
—யவம்சஸ்துதீப :
லோகப்ஜோவஸ்து புத்ரோஸ்தலஜயதிவர: நிர்களாங்
—கேசஸார
தத்வம்தம்நாம நங்கிநியமமவிபலோ யோகமான்யே
மதங்க : ||

மேஷமுதலிய மாஸங்களுக்கு, இத்தனைபாகம் கலே விகலே, எனச்சொன்ஞர். இதில் சித்திரைமாஸ ப்ரமாண வாக்யம் "ஸ்ரீலேசோமானலக்ன :" என்பதிவ் வாக்கியத்தில் சித்திரைமாஸத்திற்குத் தேதி (30), நாழிகை (55),விநாடி (32) என்ருயிற்று. இவற்றைச் சூர்யநவாம்சத்தின் பேரில் ஒன்பதால் பாகிக்க, அம்சம்-1-க்கு-தேதி (3) நாழிகை (26) விநாடி (10) என்ருயிற்று. சூர்யன் (3) அம்சமேறி யிருப்பதால் அவற்றின் மொத்தம் தேதி-(10) நாழிகை (18) விநாடி (30) சூர்யனேறிஞரென்ருயிற்று.

இதுநிற்க, லக்னநவாம்சம் கடகமென்றதால், கடகத்தில் விநாடி (36) கலை (32) க்குள் ஜனனமென்று கிறது. உதயாதி நாழிகை (12) விநாடி (39) கலை (11) க்குள் ஜனனமெனில், அக்காலையில் கடகலக்னம் வருமாகில், மிதுனம் (5-¼) ரிஷபம் (40) ஆக பத்துபோக பாக்கி நாழிகை -2-56-11-க்கு மேஷம் (4-¼) இந்த 2-59 11-போக பாக்கி-1-15-49-செல்லென்றுயிற்று. இதை மேஷம் (49) இதற்குத் தேதி-1-க்கு (8¼) விநாடி வீதம் தள்ள, தேதி பத்துக்கு (820) விநாடிக்கு நாழிகை-1-விநாடி-220 கலை-30-க்கு மேஷத்திற் சென்ற நாழிகை-1-விநாடி-15-கலை-49-போக பாக்கி விநாடி-6-கலை-41-ஆயிற்று. இங்கே விநாடி சுத்த மறிவதற்கு ராசிசுத்தம் பார்க்கவேண்டியது அவசியமாதலின் (லக்னஸ்புடத்திற்கு ராசி ப்ரமாணவிகடிகாவாக்யம் அவசியமறியவேண்டும்) அதைச்சொல்வன்.

சுலோகம்

விசாகினீஹா ரசயாலுகுண்டல :
ஜயாங்கரக்தாங்க சநீலதோய்யுகம் ।
குலாலமாயாங்க ந்ருஹாரபூமிராட்
க்ரமேண மேஷாதிவிநாடிகா : க்ரமாத் ॥

இந்தசுலோகத்தில்

மேஷராசிக்கு 'விசாகி' என்றதால் விநாடி (254) என்றும்;
ரிஷபத்திற்கு 'நிஹார' என்றதால் விநாடி (280) என்றும்;
மிதுனத்திற்கு 'சயாலு' என்றதால் விநாடி (315) என்றும்;
கடகத்திற்கு 'குண்டல:' என்றதால் விநாடி (331) என்றும்;

இவ்வாறு மற்ற ராசிகளுக்குஞ் சொன்னுர்.

இந்த சுத்தவாக்யப்படி முன்பார்த்த விநாடியில் ரிஷபம் 40க்கு (5) விநாடி குறைந்ததாலும், மேஷத்தில் (1) விநாடி குறைவிற்கும், கடகத்தில் (1) விநாடி அதிகத்திற்கும் சரியாய்ப்போக இந்த சித்தஸ்புடத்தில் லாபம் வந்த (5) விநாடியையும் முன்வந்த (6) விநாடி (41) கலையுடன்

சேர்க்க மொத்தம் விநாடி (11)-கலை (41) என்ருயிற்று. எனவே, ஸ்ரீ ராகவன் அவதார காலத்தில் கடகலக்னத்தில் சென்றவிநாடி (11)-கலை (41) என்ருயிற்று. மேஷத்திற் சென்ற நாழிகையை பத்திற்கழித்ததாலும், சூர்யன் மிதுனம்சத்திற்கும் (10) தேதிசென்றுபோய் (11) தேதி-(18) நாழிகை- (50) கலை நின்றதாலும், பதிஞேராந்தேதி உதயாதி (12) நாழிகை (59) விநாடி (11) கலைக்கு அவதரித்தாரென்ருயிற்று.

உதயாதி சென்றநாழிகையை மூன்றினுற்பெருக்கி ஏழினல் வகுக்க- (4) வருவதால் நான்காம் வாரமாகிய புதவார மென்ருயிற்று. இதற்குச் சரியாய் 'ஏகாதசர்நால் வருச்சரே' என்ருர். எனவே இதற்கு-பதிஞேராந்தேதி புதவாரமென்றும் கொள்க.

லக்னத்தில்சென்ற விநாடி (11)-கலை (41) என்பதற்குப் பொருந்தவும் "ஏகாதசர் நால்வருச்சரே" என்ருர். அஃதெங்ஙனமெனில்? 'ஏகாதசம்' எனலால் (11) விநாடியென்றும்-'ஏகம்' ஒன்று தசம்நாலு ஆக (41) கலையென்றும் பொருள்படுவதால், கடகத்தில் (11) விநாடி (41) கலை சென்றதென்பதை வெளிப்படையாய்க் கூறினதாயுமாயிற்று.

இங்கே-'உச்சர்' என்னும் பதத்திற்கு (உச்சரிப்பில் நிற்பவரென்று) ப்ரஸ்தாபத்தில் நிற்பவரெனப் பொருள் கொள்க.

வினு:—இந்த தேதி, வாரம் வால்மீகரெங்கே சொன்ஞர்?

விடை :—"வாக்பதா" என்றதால் 'வா' (4) 'ப' (1), 'தா' (6), ஆக இம்மூன்றின் மொத்தம் (11) ஆதலால் பதிஞேராந்தேதி எனவும்; முதல் 'வா' என்றது நாலைக் குறித்ததால்-நாலாவதாகிய புதவாரமெனவும்; இரண்டாவது 'ப' என்று ஒன்றைக் குறித்ததால், முதலாவதாகிய விஷ்கம்பயோகமெனவும், மூன்ருவது 'தா' என்றது ஆறைக் குறித்ததால்-ஆருவதாகிய வணிஜவா கரணமென்றும் ஆம்.

மூன்ருவது உரை முற்றிற்று.

## நான்காவது உரை

இந்த உரையால் இன்னின்ன மந்த்ரங்களின் அதிஷ்டான தேவர்கள் இக்கமலக்கண்ணனாக உருக்கொண்டாரென்பதும், தினசுத்தியின் பெருமையும், இதில் மஹாயந்த்ரமுள்ளதும் சொல்வன்.

மாஸத்தாலாகிய விசேஷம் யாதெனின் :—இவர் ஆதிமூலப் பொளாதலின் ஆதிமாஸமாகிய மேஷமாசத்திலே உதயமானார், ஸ்வாமி ஆதிமூலப் பொருளென்பதற்குத் திஷ்டாந்தம்.

### பாகவதம்

ஆதியா மவதாரமாயப் புருடனை யறைவார்
கோதிலாதலன் குலவிரண்டே முதலாக
ஏதிலா வவதாரங்களெடுத்ததை யினினு
ஞேதுகே னெனச் சூதமாமுனி யெடுத்துரைப்பான்.

இதனால் நாராயணமூர்த்தி ஆதிமூலப் பொருளென்பதறிக.

நவமிதிதியினாலாம் விசேஷம் யாதெனில்—பிரமன் லோக ஸ்ருஷ்டி காலத்தில், வைக்ருத ஸருஷ்டியில் - ஒன்பதாவது ஸ்ருஷடியாய் நரர்களை ஸ்ருஷ்டித்ததால், அந்த நரஸ்ருஷ்டிக்கு வித்து சனகாதியர் நால்வராயும்; அவர்கள் மலரோனது சுத்தஸாத்வீக தியானகாலத்திலவதரித்தமையால், அவ்வாறாகிய நராங்குரமான திதியின்கண்ணே ஜனித்தனர். நவப்படைப்பு நரப்படைப் பென்பதற்குதாரணம்.

### பாகவதம்

நவப்படைப்பென நவிலுவர் நரர்களை நலஞ்சேர்
புவித் தலத்தினில் படைத்திடு மானிடர் பொற்பு
முவுப்புறுந் திருத்தேவர்கள் பொற்பு மிங் கொருவாத்
தவத்தின் மிக்குயர் சனகனாதியர் பெறுகுவரால்.

3

இந்தப் பாடலின் கருத்தால் முற்கூறியது விளங்கும்.

புனர்பூசத்தாலாய விசேஷம் யாதெனில்:—அந்த புனர் பூசத்திற்குப் புடைநின்ற நாளாகிய ஆதிரை சிவபெருமானது உருவமென்றோதுபவாதலின், அம்மூர்த்தியினைப் புடைவைத்த கடவுளென்பது தோன்றப் புனர்பூசத்தில் ஜனித்தனர்,

கடகலக்னத்தினலாய விசேஷம் யாதெனில்—விராட் புருஷனுடைய ஹ்ருதயஸ்தானம் கடகமாதலின், அன்பரது ஹ்ருதயகமலத்தில் அவர் நினைத்த வுருக்கொடு வருவரென்பது தோன்றக் கடகத்தில் ஜனித்தனர். ஹ்ருதயஸ்தானம் கடகமென்பதற் குதாரணம்.

சுலோகம்

காலாங்கனி வராங்கமான நமுரோ ஷருத்க்ரோ
டவாஸோவ்ருதோ
வஸ்திவ்யஞ்சன மூருஜாநு யுகளீஜங்கே ததோங்க்ரித்வயம்
மேஷாச்வீப்ர தமாநவர்க்ஷசரணச் சக்ரஸ்திதாராசயோ
ராசிக்ஷேத்ரக் ஷர்க்ஷபாரி பவனம் சைகார்த ஸம்ப்ரத்யயோ

இந்த சுலோகார்த்தம்:—காலம் என்கிற புருஷனுக்கு மேஷம் உசசந்தலையெனவும்; வ்ருஷபம் முகமெனவும்; மிதுநம் மார்பெனவும்; கடகம் ஹ்ருதயமெனவும்; சிம்மம் வயிரெனவும்; கன்னி இடுப்பெனவும்; துலாம் அடிவயிரெனவும்; விருச்சிகம் ஆண் குறியெனவும்; தனுசு துடையெனவும்; மகரம் முழந்தாளெனவும், கும்பம் கணைக்காலெனவும்; மீனம் பாதமெனவும் சொன்னர்.

இந்தக் கடகலக்னமாகிய ஹ்ருதயத்தின் பெருமை யாதெனில், அவவிடத்திற் றேன்றுகின்ற மனம் புத்தி அஹங்காரம் சித்தம் என்னும் நான்கினுக்கும் பாசநேசர் நால்வரும், அதிஷ்டானதேவர் நால்வரும் ஆக எட்டுப் பேர் மூர்த்திகரித்து நிற்கும் லக்னமாதலின்-அது பகவத் ஜனிதத்திற்கிடமாயிற்று.

பாசநேசர்க்குதாரணம்.

பாகவதம்.

உரைதரு சிறப்புவாய்ந்த மனமுதலாக வோங்கும்
கரண நான்கினுக்குப் பாச நேசர் நற்காமதேவன்
அருமணி புரைவண்ணத்த னனிருந்த னனந்தன் செய்ய
மரைமலர்ச் செங்கண் வாசுதேவனு மரபின் மன்னே.

இப்பாடலில் மனம்-புத்தி-அஹங்காரம் சித்தம் என்னும் நான்கினுக்கும் காமதேவன்-அருனிருந்தன்-அனந்தன்-வாசுதேவன் ஆகிய நால்வரும், ஹருதயஸதானமாகிய கடகத்திற்குப் பாசநேசரென்பது விளங்கும்.

அதிஷ்டானதேவர் நால்வரென்பதற்கு.

பாகவதம்.

மனமெழிற் புந்திநற்சீர் மருவகங்காரஞ் சித்தம்
எனுமிவைக் கியைந்து நாளு மிகைந்திட்டான தேவர்
பனிதரு கதிரோன் 'வேந்தன் பகாதரு முருத்திரன்றான்
நினைவுறு சீவனென்றே நிகழ்த்துவ மரபின் மன்னே

இப்பாடலிற் சொல்லிய மனம் முதலிய நான்கு கரணத்திற்கும், அதிஷ்டான தேவர் சந்த்ரன் 1, ராஜா 2, ருத்ரர் 3, ஜீவன் 4, முன்சொன்ன பாசநேசர்-4, ஆக எட்டு (8) பெயரும் பூணநுக்ரஹத்தோடும் நின்ற முஹூர்த்தமாகிய கடகலக்னத்தில் அந்த அநுக்ரஹ காலத்தில் ஜனித்தாரென்பதற்கேற்ப அத்தேவரில் ராஜாவும் சந்த்ரனும் நின்றனர்.

ஆகையால் ஸ்வாமி ஜனித்த திதி வார நக்ஷத்ர லக்ன பலங்கள்-தத்தமிற் சிறந்தமையென்பது தோன்ற "நால்வருச்சர்" என்றார்.

இனி க்ரகங்களின் பெருமை.

"நாடிலேகாதசர்நால்வர்" என்றதால் 'நாடு' என்னும் பூமியை 'இல்' மனைவியாயுடைய (நாராயணமூர்த்தி) என்றும்; 'ஏகாதசர்' எனவே-பதினொருவராய் நின்ற சிவ பெருமானெனவும்; 'நால்வர்' எனவே சதுர்முகனாகிய ப்ரம்ஹாவெனவும், 'உச்சரே' எனவே இம்மும்மூர்த்திகளும் பூர்ணாம்சராய் அவதரித்தாரென்பதாயிற்று. இந்த இடத்தில் வால்மீகரும் "ப்ரோத்யமானே ஜகந்நாதே ஸர்வலோக நமஸ்க்ருதே" என்றார். இதற்கும் ப்ரோத்யமானே என்றதால், த்ரிபுராந்தகனெனவும், ஜகந்நாதே என்றதால், பூமிதேவிக்கு நாதனாகிய விஷ்ணுவென்றும், ஸர்வலோக நமஸ்க்ருதே என்றதால், ஸகல லோகமும் தாழும்படி தான் உயர்ந்த ஸ்தானத்தினின்று சிருஷ்டிக்கிற ப்ரம்ஹாவென்றும் பொருள்.

துஷ்டராக்ஷஸாதியர் - நீதியற்றுக் கொடுங்கோல் செலுத்தத் துன்புற்றிருந்த பூதேவியினது பயம் நீங்க அவதரித்தலின், விஷ்ணுவுக்கு 'நாரடில்' என்றார்.

விராட் மும்மூர்த்தியுருவர், அர்த்தநாரீச்வரர், ருத்ரவுருவர், அஷ்டமூர்த்தியுருவர், ஸத்யோஜாதர், வாமதேவர், அகோரர், தத்புருஷர், ஈசானர், ஏகாதருத்ரர், என்னும் பதினொரம்சங்களின் குணபூர்த்தியும் ஸ்ரீராமரிடமிருந்தமை தோன்ற 'ஏசாதசர்' என்னும் பதத்தினால் சிவனைக் குறித்தது.

பரம்ஹாவினுடைய தலையின்கண் தேவர் ஜனித்தமையாலும் சுத்தஸாத்வீகம் ஜனித்தமையாலும், அந்த சுத்த ஸாத்வீக தெய்வகுணம், இந்த ஸ்ரீராமரிடத்துள்ளவை தோன்ற, நான்கு முகங்களுள்ளவரெனப் பொருள்படுகின்ற 'நால்வர்' என்னும் பதத்தினால் ப்ரம்ஹாவைக் குறித்தது.

இனி யந்த்ரம் வருமாறு கூறுவன்.

"நீதிசே ரோடைமா களிற னுதய ராசி கோணுடில்" என்றதை "ஓடைமாகளிறனுதயராசி கோள்"

இல்-நாடு-நீதிசேர்-எனப் பிரித்துக்கொள். பிரித்தால் ஒடைமாகளிறனுகிய ஸ்ரீ ராமரது "உதயராசி" என்ற தால் உ-உயிரிலேந்தாவதாகையால் (5), த்-(7) அதிலிருக்கும் அகார உயிர் (1), ஆக (8). ய-என்பதில்-ய்-(11), அதிலேறி யிருக்கும்-அகார உயிர் (1), ஆக (12). உ-வில் வந்தது (5), த-வில் வந்தது (8), ய-வில் வந்தது (12), இம்மூன்றையுஞ் சொல்லிப் பின்பு "ராசி" என்றதால் இம்மூன்று தொகை யுஞ் சேர்க்க (26) ஆகிறது. இத்தொகையை மூன்றின் பேரில் சராசரிப்படுத்த மூவெட்டிருபத்தினன்கென்ருயது. இம்மூன்றும் கூட்டுத்தொகை இருபத்தைந்தாயினும் சராசரி என்றதால் 'சேஷம்பரித்யஜேத்' என்னும் வாக்கியப் படி-மீதி ஒன்றையுந் தள்ளப்பட்டது. (5) (8) (12) (14) இதனை-'கோள்' 'இல்' 'நாடு' 'நீதிசேர்' என்றதால் இவை கள் மூர்த்திகரம்பெற்ற மந்திரங்களென்றும், அதனை இடம் பார்த்துச் சேர்க்கச் சொன்னுரென்றும் ஆயது. இவைகளை அடைக்க சோதிச் சக்கரத்தில் இடம் யாங்கு ளதென ஆலோசிக்கையில்-சாஸ்த்ர பரிசீலனையில்:

காலவிதாநம்.

சுலோகம்.

க்ரஹம்ஷோடசதாக்ருத்வாப்ரம்மமத்யே சதுடயம்।
ஈசான்யமீனமிந்த்ராக்னிமேஷாத்யச்ச ப்ரதக்ஷிணம்।

இந்த சுலோகார்த்தம்:—வீட்டைப் பதினறு பங்கு பண்ணுவதென்றும், நடுவில் ப்ரம்ஹம் நிற்க நாலிடம் எனவும், ஈசாநமுதல் மேடமுதலிய ராசியாய்ப்பார்க்க வேண்டுமெனவும் சொல்லியிருத்தலால், நடுவில் சொல் லிய நாலு ப்ரம்ஹஸ்தாநமென்றது, இம்மந்திரங்களா கவே யிருக்குமென்றெண்ணுகையில் ப்ரம்ஹஸம்பந்த மான அந்த கணக்குள்ள மந்திரங்கள், பஞ்சாக்ஷரம் (1), அஷ்டாக்ஷரம் (2), த்வாதசாக்ஷரம் (3), ப்ரம்ஹகாயத்ரி (4), இந்த நான்குந்தானென்று அதற்குரிய கோளும், இல்லும் நாட இருபத்துநான்கு அக்ஷரமாகியதை மூன்றின் சராசரி யென்று சொன்னதினலேயே, த்ருபதையென்று காயத்ரி

யின் பெயராதலினுல், காயத்ரிக்கு ஸாம்யமான இம்மஹா மந்த்ரங்களென்று, மற்றதையும் நினைக்க இடமாயிற்று.

இவ்விடத்திய் வால்மீகர் "ராமம் திவ்யலக்ஷணஸம்யுதம் விஷ்ணோராத்தம் மஹாபாகம்" என்ருர். அதனுள் ரா (2), மம் (5), தி (8), வ்ய (1), ல (3), க்ஷ (0) ண (5). இதனுல் 2-5-8-1-3-5. இந்த ஆறு தொகையும்-'ஸம்யுதம்' என்றதால் கூட்ட (24) ஆகியதனுலும், ஷட்குக்ஷி என்னும் பெயரின்படி இந்த இருபத்தினுன்கையும், காயத்ரியெனக் கொள்ளப்பட்டது 'மஹாபாகம் என்றவிடத்தில் 'மா' (5)ம்-பஞ்சாக்ஷரமெனவும், 'ஹா' (8)ம்-அஷ்டாக்ஷரமெனவும், 'பாகம்' என்றதால், 'பா' (4) இதை 'கம்' என்றதால், நடத்தென்ருயது. 'ஹா' என்ற எட்டின் பேரில் 'பா' என்ற நாலைநடத்த, எட்டும் நாலும் பன்னிரண்டென ஆயிற்று. இந்தப் பன்னிரண்டும்-த்வாதசாக்ஷரமெனவும், இதுகளை 'திவ்யலக்ஷணஸம்யுதம்' என்றதால், திவஸம்பந்தலக்ஷணம் கபோளம். இதில் 'ஸம்யுதம்' என்றமையால் சேரென்ருயிற்று. எனவே பஞ்சாக்ஷர, அஷடாக்ஷர த்வாதசாக்ஷர, காயத்ரிகளைச் சேர்க்க என்ருர். இவர் 'ஸம்யுதம்' என்றவிடத்து கம்பர் சேரென்ருர். 'திவ்யலக்ஷணம்' என்றவிடத்து 'கோளில்' என்ருர். இந்நான்கு வகை அக்ஷரத்திற்கும், அதிஷடான தேவர் இப்பச்சை வண்ணரென்பது தோன்ற, 'களிறனுதயராசி' என்ருர்.

வினு:—முதல் பஞ்சாக்ஷரத்திற்குமாத்திரம் உயிரெழுத்தாற்சொல்லி, மற்ற அஷ்டாக்ஷர, த்வாதசாக்ஷரத்திற்கு உயிர்மெய்யெழுத்தாற் சொல்லியதென்ன?

விடை:—பஞ்சாக்ஷரத்தில் ப்ரணவம் சேராததால் உயிரெழுத்தாற் சொன்னுர், அஷடாக்ஷர, த்வாதசாக்ஷரங்களில் ப்ரணவம் சேர்ந்திருப்பதால், அகரஉயிரேறிய இரண்டெழுத்தால் சொன்னுர். அகரம் எழுத்திற்கெல்லாம் ஆதி போல், மந்த்ரங்களுக்கெல்லாம் ஆதி ப்ரணவமாதலின், ப்ரணவத்தோடுங் கூடிய மந்த்ரங்களென்னுங் குறிப்புக்கேற்ப, அகர உயிர் சேர்ந்த மெய்யெழுத்தாற் சொன்னுர்.

விஞ :—நடுவில் அஷடாக்ஷரத்தையும், தவாதசாக்ஷரத்தையுஞ் சொல்லி முதலில் பஞ்சாக்ஷரத்தையும் கடையில் காயத்திரியையுஞ் சொல்லியதென்னே?

விடை:—நடுநின்ற அஷ்டாக்ஷரமூர்த்தியும், த்வாதசாக்ஷரமூர்த்தியும் ஒருருவாகிய விஷ்ணுவாகியும், வலது புறம் சிவன், இடதுபுறம் பிரமனுகியும், நின்று விளங்கப்பட்ட பரமபுருஷனே ராகவ உருக் கொண்டதால் அவ்வாறு சொன்னுர். மேலும், ராமாவதாரத்தில் பாதி விஷ்ணு தெய்வமாதலாற்ருன், ராமரை விஷ்ணுதைவதவமென்பது. இவ்விடத்தில் வால்மீகர் "விஷ்ணோரர்த்தம் மஹா பாகம்" என்று-விஷ்ணு அம்சம் பாதியென்றும், கால் அம்சம் சிவாம்சமென்றும், காலம்சம் ப்ரம்ஹாம்சமென்றும், பொருள்படச் சொல்லியிருக்கின்ருர். இம்மஹா மந்த்ரங்கள் யந்த்ரத்தி லெவ்வாறடைப்ப தெனில்:— ரிஷபம் சிவபெருமானே ப்ரளயகாலத்தில் தர்மதேவத்வமான உருவோடும் நின்று தாங்கிய வாஹநமாதலாலும் மிதுநம் தம்பதிகளிருவரால் இணைபிரியாமல் சிவபெருமானது அர்த்தநாரீசுவரஸ்வரூப உருவோடும் நின்றதாலும் கடகம் சங்கரன் வளையல்விற்ற திருவிளையாடலில் நடித்ததாலும், மேலும் அந்த ராசிக்கு ஆடியென நடேசர் திருநாமமமைந்ததாலும், இம்மூன்று ராசியும் பசுபதியினது அம்சமொத்தலால் "இல்லும்." மிதுனத்திலிருக்குங் கேது ருத்ரரூபம். அதற்கு:—

பலாச தூரம் ஸங்காசம் தாரகரக்ரஹமஸ்தகம் ।
ரௌத்ரம் ருத்ர குணோபேதம் தம்கேதும் பணமாம்யஹம் ॥

இந்த சுலோகத்தின் கருத்து:—கேதுவானவர் புரசம் பூப்புகை நிறமென்றும், தாராக்ரஹங்களுக்கு சிரசென்றும், கோபமுஹூர்த்தமென்றும், ருத்ரகுணத்தோடே சேர்ந்தவரென்றுஞ் சொல்வதால், அவ்வாருய குணங்களை அடைந்த கேதுவும், நாடகத்திலிருக்கும்-குரு தேவகுருவாய் தக்ஷிணுமூர்த்தி உருக்கொண்டாரென்று புராணங்களில் ப்ரசித்தமாதலாலும், சந்த்ரன் பிருகபாணியினது மகுடத்தில் தரிக்கும் நண்பராதலாலும், இந்த மூன்று க்ரஹங்களும் கங்காதரனது பாரிஷதாளாதலின். "கோளில்." நாடென்கிற விதிப்படி - கோளும்பார்த்து,

சேரென்றவிதிப்படி சேர்க்க, பஞ்சாக்ஷரம் இவ்வறுவகை யாருகுறும் அறையில் நாட்டலாயிற்று.

சிங்கம்-தூணிலிருந்து ஜனித்த திருமாலினது நரசிங்க உருவமாதலாலும், கன்னி தேவர்க்கு அமுதீய அவதரித்த லக்ஷ்மீகாந்தனது மோஹிநி உருவமாய் கையில் கரிந்த பயிருடன் தோணியிலிருந்து, க்ஷீராப்திக்கரைக்கு வரும் முஹூர்த்தமாதலினுலும், துலாம் ஒரு புருஷாகிருதியாய் கையில் தராசு வைத்துக்கொண்டு ஜனங்கள் செய்த புண்ய பாபத்திற்குத் தக்கபடி படியளக்கக் கடவுள் முஹூர்த்தமாதலின், இம்மூன்றும் நாராயணம்ச மொத் திருத்தலால், 'இல்லும்' துலாத்தினிற்கும் சனிபகவான் ஸூர்யபுத்ரனாய் அவதரித்த நாராயணம்சமாதலின் அந்த சனிவாரத்திலேயே வேங்கடாசலப் பெருமாளுக்குள்ள வ்ரத ஆராதனங்கள் தளிகைகளெல்லாம் செய்ய, விஷ்ணு அம்சமாய் நின்றதால், "கோள்." நாடென்ற விதிப்படி கோளும்பார்த்து. "நிதிசேர்" என்றபடி சேர்க்க, அஷ்டா க்ஷரம் இந்நான்கினேருகுறும் அறையில் நாட்டலா யிற்று.

வ்ருச்கிகம் தேளுருவெனலால், விஷஜந்துவென்ரு யிற்று அதனுல் அனந்தன் முதலாய் தனது மடியில் தாமோதரனைத் தாங்கப்பட்ட நாகரினமாயினதாலும். பிர கச்சாதகம் இதற்கு :—

சுலோகம்

वस्त्रैर्व्यहीना भरणैश्चनारी । महासमुद्रात्समुपैतिपारम् ।
स्थानच्युतस्सर्पनिबद्धपादा । मनोरमावृश्चिकराशिपूर्व्याम् ॥
स्थानस्तु रत्नान्यभिपाश्चतिनारी । भतृकृता भुजगापृतदेहा

என நாராயணரூபமென்று சொன்னதாலும், தனுஸு ஒரு புருஷன்கையில் விற்பிடித்துக்கொண்டு, இடுப்பிற்குக் கீழ் குதிரை போன்றிருத்தலில், கல்க்யாவதார முகூர்த்தம் போலும் நின்றது. ஆதலினாலும், மகரம் முதலேயுருவ மாய் முகமாத்ரம் ம்ருகம் போன்றிருத்தலாள், மத்ஸயாவ தார முகூர்த்தமாயமைந்து, இம்மூன்றும் வாஸுதேவாம் சத்திற்கு " இல்" ஒத்தலாலும், தனுஸினிற்கும். "ராஹு" பூமிதேவிசாயாரூபம். இதற்கு :—

கூர்மபுராணம்.

மருவு பூமியின் சாயையா மிராகு மண்டலமற்
றிரவி மண்டலந் திங்கண் மண்டல மெனு மிரண்டில்
உரை செய்கின்ற தோரளவதா யவற்றின் கிழுலவும்
கரியதாகுமற்ற தனிறமென்பர் கற்றுணர்ந்தோர்.

இப்பாடலின் கருத்துப்படி—ராஹுவானவர் பத்ம நாபன் பத்நியாகிய பூமிதேவி-சாயாரூபமாதலாலும், மக ரத்திலிருக்கும் 'குஜன்' பூமிபுத்ரன். இதற்கு :—

சுலோகம்

धरणीगर्भसंभूतं विद्युत्कान्तिसमप्रभम।
कुमारं शक्तिहस्तं च मङ्गलं प्रणमाम्यहम॥

இந்த சுலோகத்தின் கருத்து :—பூமி தேவி கர்ப்பத்தில் ஜனித்தானென்பது. அக்காரணத்தால், அச்சுதரது புத்ராத லாலும், 'கோளும்' நாடென்றபடி நோக்கி அவ்விரண்டு கோளும்-வாஸுதேவாம்ச பாரிஷத உருவாதலின், நீதி சேரென்ற விதிப்படி, இவ்வைங்கையோரருகுறும்-அறை யில் த்வாதசாக்ஷரம் நாட்டலாயிற்று.

"கும்பம்" ஒரு புருஷன் கையில் கும்பம் வைத்துக் கொண்டு நிற்கின்றானெனலாம், மலரோனுருவாய் கையில் கமண்டலமென்னும் கடத்தை வைத்திருத்தலாலும்,

மீனம் வாலுந்தலையுமாய் கவ்வி நிற்கின்றதால், அம்மீன் குஞ்சு பொரிப்பதில் அளவின்றிப் பெரும் ஸ்ருஷ்டி விருத்தியால் ப்ரம்ஹாம்சமாயிற்று. 'மேஷம் யாக வஸ்துவான தாலும், பிரமருக்கு அஜர் என்கிற பெயரால் ஸாம்யமாயொத்திருத்தலாலும், 'இல்லும்' மீனத்தினிற்கும் சுக்ரனை னவர் ப்ரம்ஹதேவர் பேரனசி அஸுர குருவாய் நிற்பதாலும், ம்ருதஸஞ்சீவி மந்திர பயிற்சியாலும், மேஷத்திலிருக்கும் புதன் வித்வானதலாலும், ஜோதிஷதெய்வமாதலாலும், அதிலிருக்கும் ஸூர்ய ஸ்ருஷ்டியால் ஸாக்ஷாத்காரமாகிய ப்ரம்ஹதேவ உருவனே ஆதலாலும், இம்மூனறு க்ரஹங்களும் ப்ரம்ஹபாரிஷாதளுருவத்தோடு, ப்ரம்ஹாம்சம் பெற்று நின்றதால், 'கோளும்' நாடென்றபடி பார்த்து, இவ்வறு வகையோரும் ப்ரம்ஹாம்சமாய் நின்றதால் அவரருதுறும் அறையில் 'நீதிசேர்' என்ற விதிப்படி, ப்ரமஹ காயத்திரி நாட்டலாயிற்று. இவ்வாறு மந்த்ரம் அடைக்க விதி சொல்லியதால், மந்த்ரம் அடைப்பதெல்லாம்-யந்த்ரமெனல்-மந்த்ரசாஸ்த்ர விதியாதலின், யந்த்ரமென்றுயிற்று. "மாகளிறனுனுதயராசி" என்றதால்-பெருமை பொருந்திய ஸ்ரீ ராமரது உதயராசி-பஞ்சாக்ஷர அஷ்டாக்ஷர த்வாதசாக்ஷர காயத்திரி என்பனவாயமைதலின், இந்த யந்த்ரத்திற்கு ஸ்ரீ ராமரது ஜாதக யந்த்ரமெனவும், நாலு கேந்த்ரங்களிலும் பரமோச்ச க்ரஹங்கள் நால்வர் நின்று சுழற்காற்று மழை கூட்ட நிற்பது போல், பூர்ணநூக்ரஹ முஹூர்த்தமாய் நிற்றலின் மஹாயந்த்ரமென்றும் இவ்வாறுய், இரண்டு காரணங்களாலும், ஸ்ரீ ராம ஜாதக மஹா யந்த்ரமெனப் பெயரமைந்தது. இந்த யந்த்ரம்-ஜோதிச் சக்கரத்திற்கு சுபாவத்தினே உரியதாயினும், ஸ்ரீ ராமர் அவதரித்ததை முன்னிட்டு ராமாயணத்தில் சொல்லியதால் இந்நூற்கு-ஸ்ரீ ராமஜாதகமென்று பெயரமைந்தது. இம் மஹாயந்த்ரத்தில் ஐந்தாமுறையிற் சொல்லிய விதிப்படி சாந்தி புரிவதற்கு க்ரஹ சாந்தியெனப் பெயராம். இதிலடைந்த பஞ்சாக்ஷரமானது இவ்வுலகத்திலுள்ள சைவ மதத்தையெல்லாம் விளங்கச் செய்து சிலரை ஆசார்யராகவும், சிலரை சிஷ்யராகவும், புநிதம் செய்விக்கின்றது. அஷ்டாக்ஷர த்வாதசாக்ஷரங்கள் ஜகத்திலுள்ள வைஷ்ணவ மதத்திற்கு ஆதாரமாய் விளங்கி-சிலரை சிஷ்யராகவும்,

சிலரை ஆசார்யராகவும், பாகவதாளிஷ்ட பூர்த்திபண்ணி நிற்கின்றது. ப்ரம்ஹ காயத்ரி இதற்கெலர்ந் தாய்போன்று வேதமாதாவெனப் பெயர்பெற்று ப்ராம்ஹணரென வேதியர்க்கு ப்ராம்ஹணிகத்தை ஈந்து மூர்த்திகரித்து நின்றது.

வினு:—உலகத்தில் (12) ராசியாய் வகுக்கும் ஜோதிர் யந்த்ரத்தை (16) அறையாய் எழுதி அதில் உதய ராசியென் னும் பதத்தை நாநாவிதமாய் பிரித்து நான்கு மஹாயந்த் ரங்களெனவும், அதுகள் நிற்க இடமென்றும், இவ்வண் ணந் தாத்பர்யப்பட்ட கம்பர் சொன்னுரென்று சொல்வது நகைப்பிற்கிடமாகிறது. எது உலகத்தில் வழங்கிவரு கின்றதோ அதற்குச் சற்றேறக் குறையச் சொல்லியிருக் கும் அனுஷ்டானததை ஒப்புவது ஸஹஜம். லோகாசார விருத்தமான சாஸ்த்ரமும், முன் பழைய வழக்கமில்லாத தையும், இப்பாடலில்-நீர் அர்த்தஞ் சொன்னுலெப்படி யொப்பலாம்?

விடை:—நீ வினவினது சரியன்று, நான் லோகாசார விருத்தமாயும், முந்நூலிலிலாததையுஞ் சொலலவேணு மென்கிற அகத்தியமென்ன? அதில் கொள்ளாத அர்த் சத்தை நான் பொருத்திச் சொல்லியதை நீ தாக்ஷிண்ய வசாத் ஒபபினுலும், உலகத்தோரொப்புவரோ உலகத்தோ ரொப்பினும், என் மநதிற்கு த்ருப்தியில்லாததை உனக்குச் சொல்ல மனம் வருமோ, நீ ஸங்தேஹப்படுவதாவது இரண்டு விதம் லோகாசரணே யில்லையென்பதும், முன்னூ லிலாததைச் சொல்லுகிறேனென்பதும், உலகத்திலனேக ஆசரணேயானது, அதன் மூலமின்னதென்று அறிந்து கொள்ளாமலே நடத்திவருகிருர்கள்

அதில் சில வருமாறு:—இந்த ஸ்ரீராமநவமி உத்ஸவ மானது (11) தினஞ் செய்வதென்றும், இந்த ராமாய ணத்தை மாத்திரம் மிலேச்சர் முதலிய ஸர்வமதஸ்தரும், ஜயினுள், பௌத்தாள், காணுபத்யாள், சைவாள், முதலி யோரும், த்வைத, அத்வைத விசிஷ்டாத்வைதாளும்' வாசித்தும் பூசித்தும் வருகிருர்கள். மற்ற வைஷ்ணவ ஸம்பந்தமான நரஸிம்மம், கிருஷ்ணன், வராஹம் கூர்மம் முதலிய தெய்வங்களுக்கு ஸம்பந்தமான ஆலய

ப்ராணங்களை இதுபோல் பொதுவாய் பாராயண பூசைகள் செய்யாமலுமாய் வழங்கி வருகிறது. எதனுலெனில், ப்ரஸவமுதல் ஸூதகாந்தம் பதினெரு தினமாய் வகுத்து அதில் ராமஜாதக மஹாயந்த்ர பூஜாங்கமஞ் செய்யவேண்டுமென அதன் விரிவை ஐந்தாம் உரையில் வெளியிட நின்றதாலவ்விடத்தி லறிந்துகொள். உலகாசரணையில் அப்பதினெரு தினமும் காநத்துடன் அனுஷ்டிக்கிருர்கள். ஸகல ஸமயத்தாரும் ப்ரார்த்திப்பது சோடதிம் யாருக்கும் பொதுவாதலினுலச் சோதிட தெய்வமான பரஞ்சோதி ரூபமே ஸகலமதத்திற்கும் ஆதி. ஆதலின், அதி ஜோதி ஸ்வரூபாநுக்ரஹ முஹூர்த்தமான ஐந்து க்ரஹங்களும், பரமோச்சராய் நிற்க அவதரித்தமையால், தாசரதியானவர் அவ்வவர் மதத்தெய்வமாகவே ப்ரார்த்திக்க விளங்குகிருர். முன்னமே பதினறு அறையாப் போடுவதற்கு விதி சொல்லியிருக்கின்றேன். மேலும் இப்பதினறு அறையும் அததற்குரிய பலமாம மந்திரத்தோடும், பரமோச்ச க்ரஹங்களோடும், பூர்ணபலன் பெற்று நின்றதாற்ருன், ராமர் சோடசகலையும் பொருந்திய பூர்ணவதாரமென்றுலகத்தில் வழங்கிவருகிறது. மேலும், சிற்ப சாஸ்திரத்திலும், மயனூலிலும் ஒரு வீட்டை (16) பங்கு பண்ணி நடுவில் பிரமம் நிற்க நாலு அறை விடவேண்டுமென்று (முற்றம் விடும்படி) விதியேற்பட்டிருக்கின்றது. காலைவேளையில் கல்க்யாவதாரமூர்த்தி உருவமான தனுர் ராசியில் ஸூர்யநாராயணமூர்த்தி உதயமாவதாலக் காலை செய்யுங்காலைவந்தநமெல்லாம் நாராயண ப்ரீதியாம். எந்நாளும் உதய காலத்தில் தனுர் ராசியே உதிக்குமென்பதற்கு உதாரணம் :—

சுலோகம்

सार्धघटीयुगंप्रातरारभ्यन्युत्क्रमाचरन् ।
उदयादिनचांशस्तु रविर्भुङ्क्तः क्रमात्तथा ॥

இந்த சுலோகத்தின் கருத்து :—தினமும் உதயாதி (2½) நாழிகை விதமாய் ஸூர்யன் தனுர் ராசியிலிருந்து

அப்ரதக்ஷணமாய் வந்து சுற்றுவரென்றும், நவாம்சம் க்ரமமாய் சுற்றுவரென்றுஞ் சொன்னர்.

ஸாயங்காலம் அஸ்தமன லக்னம் மிதுனமாதலின், அது அர்த்தநாரீச்வர ரூபமான சிவரூப மாதலின், அவ்வேளையிற் செய்யும் ஸாயாநுஷ்டாநம் யாவும் சிவப்ரீதயர்த்தமெனவும், அக்காலத்தில் மற்றொரு தேவரை பூஜிப்பதாவது, ஸேவிப்பதாவது செய்யக்கூடாதென்றும் விதி. அதற்குச் சரியாய் சிவன் கோவிலில் ப்ரதோஷகால பூசையே புரிந்தும், அஸ்தமானத்தின் ஒரு முஹுர்த்தத்தின் பின்பு, விஷ்ணு கோவில் முதலிய முதலிய ஆலயங்களிலும் பூசை வழங்கி வருகிறது. ஆதலின் எந்தமதஸ்தரும் எந்த ஆச்ரமிகளுஞ் செய்யும் காலவந்தனையெலாம் நாராயணரதென்றும், ஸாயவந்தநமெலாம் சந்த்ரமௌலியதென்றும், இந்த இரண்டு தேவரையும் தினமும் ப்ரார்த்திக்காதவர் ப்ரஷ்டராய் போவரென்றும், சோதிடசாஸ்திர விதி. இவ்விதியை ஊஹிக்கப்பட்டவர் பேதக உபாஸ்திதியை அடையார். 'உதயராசி கோணுடில்' 'நீதிசேர்' என்றதற்கு பொருள் உதயராசி என்றும், பஞ்சாக்ஷர, அஷ்டாக்ஷர, த்வாதசாக்ஷர, காயத்ரிக்கு 'நாடில்' எனலால் ஜகத்தில் வழங்கும் 'நீதிசேர்' என்ருர். வழக்கத்தைச் சேரெனவே, ஒருவன் விசேஷ சுபதிநத்தில் செய்யும் நாந்திச்ராத்தத்திலும், ஷண்ணவதியிலும்; முந்தி விச்வதேவரைவரித்து பின்பு வஸு ரூபமாகிய பிதிரையும், அதற்குப்பின் ருத்ர உருவாய பிதாமஹரையும் பின்பு ஆதித்ய உருவாய பிரபிதாமஹரையும், வாயுமூலை தொடங்கி அப்தரக்ஷிணமாய் வரிப்பதென்ன? அபரகர்மத்தினும், பூர்வகர்மத்தினும், அந்த பிதிர்தேவதைகளுக்கு ச்ராத்தம் புரிவதென்ன? இதுகளது ஆதாரத்தை விசாரிப்பையாகில் அது முழுமையு மிந்த மஹாயந்த்ரா நுஷ்டாநமேயாம். அதில் சிலபாகம் இந்தவிச்வதேவர் மாஹாத்ம்யத்தை காடகமென்னும் வேதத்தில் விளம்பரமாய் சொல்லியிருக்கிருர். ஆகிலும் அதனது அர்த்தம் இதன்பெருமை என்ற மட்டில் தெரிகிறது. விச்வேதேவர் யாரெனில்:—விச்வமென்பது ஜகமென்று அர்த்தம். அவ்விச்வத்திற்கு தேவரெனலால் ஜகத்தேவரெனவே "ஸர்

வம் விஷ்ணுமயம் ஜகத்'' என்ற விதிப்படி பூதேவிசஹிதராய் நாராயணரெனச் சொல்லும் வாஸுதேவரெனல் ஒருவிதம். விச்வமாகிய ஜகத்தையெல்லாம் தன் வயிற்றில் வைத்துக்கொண்டு தான் ஜகன்மாதாவாய் ஈருயிர் போனின்று நாபியில் உலகை எல்லாம் பூப்பதொருவிதம். அப்படிப்பட்ட ஜகஸ்வரூபியாகிய விச்வேதேவராகிற வாஸுதேவமூர்த்தி. இந்த ஜோதிர்யந்த்ரத்தின் வாயுமூலையில் அவரது ஆவரணங்களோடு நின்றதாய், அவ்வாஸுதேவராகிய விச்வேதேவரை கிழக்குமுகமாய் வாயவ்மூலையில் வைத்து, மாத்ருதெய்வமென்னும் ச்ருதிப்படி ஜகன்மாதாவாகிய விச்வேதேவரை முன் வரிக்கிருர்கள்,

அவரது பெருமையில் சில :—

பாகவதம்.

1. பாதம்பார் தலைபனி யிருவிசும்பு கண்பரிதி
வேதம் பாட்டுவெண் மதிமனந் திசைசெவியாக
ஒதுபே ருலகனைத்து மோருருவமாம் புருடன்
ஆதியா மவதார மென்றறைகுவ ரறிந்தோர்

2. உலகம் யாவு நல்லவயவ மாதலின் உரைக்கும்
அலகின் மாமறையந்தண ராகுதி பசுநெய்
யிலகியே யெழுமகத்தழ லினிதவி நுகர்வோர்
பொலியும் யூபமிம் முதல் வப்புருடனே யாமால்.

இந்த விச்வேதேவ அம்சகணம்-இரண்டு கோடி ஈருயிராதலின் இணைபிரியாதவரென்றும், இவரை முதல் வரிக்காவிடில் மாத்ருதூஷகன் போல் ப்ரஷ்டனுகிருன். அவன் கர்மமும் பூர்த்தியாகவில்லை. அது எவ்வாறெனில் :—ஒருவனுக்கு மாதாவால் குலமேற்படவேண்டும். குலம் ஏற்பட்ட பின்பு தான் குலற்திற்குத் தக்க ஆசாரமாதலின் குலத்தை விளக்குவது மாதாவாதலின் மாத்ருபூஜை முதலில் செய்யவேண்டுமென்ருயிற்று. அதே ரீதியாய் தன்னைக் கர்ப்பத்தில் வைத்திருந்த மாத்ரு உருவாய இரட்டையாய் விச்வேதேவரை முன் வரிக்கிருாகள்.

பித்ரு உருவ தேவரென்பவர் யாரெனில்:—விஷ்ணு ரூபமான வஸுகணம்-8-கோடி; இந்தக் கணக்கில் கோடிக்கு ஒருவர் எஜமானர்கள் ஆக எட்டுகோடிக்கு எண்மர் எஜமானர்கள். இவர் ஸ்ரீமந் நாராயணரது அஷ்டாக்ஷர உருவாதமைந்தவர். அந்த அஷ்டாக்ஷர ஈசன் நாராயணர் விராட்புருஷராய் முதலிலுருவங்களுள் எல்லாம் ஆதியாய்த் தோற்றியதால் அவரிலேயிருந்து மற்றைய உருவமெல்லாம் உற்பத்தியாகவேண்டியிருந்ததால் அந்த அக்ஷர தெய்வத்தை, பிதாவென்று ஸர்வலோக பிதாவாதலால்:—இரண்டாவது பித்ருவர்ணமாய் வரிக்கிறார்கள். இவரது ஸ்வரூபத்திற்கு:—

பாகவதம்.

1. இலகு மேழ்வகை யினில்வரு சராசரத்தோடு
முலகெலாந் தனியுதிப்பது மொழிந்தடங்குவது
மலகிலாதவன் பாலலதிலை யவயமாங்
கலையலாது வேறுல கெனக் காட்டலு மிலையால்

2. எங்குமாய் நிறைதெய்வமோ டெப்பொரு ளகத்துந்
தங்குமிச்சை என்றுரைதரு சத்திகளுடனே
யங்கொழுஞ்சுட ரவிர்தரு பொன்மயமாகிப்
பொங்குமண்டபத்தில் விராட்டெனப் பொலிந்தனன் புருடன்.

3. ஆங்கு தற்துவமெமக்கு நீயளித்தி கண்ணென்ன
நீங்கி நின்றன வழுத்தலு நிலவு பேரொளியா
யோங்கு முன்னவ னவற்றினைப் பொருந்தி யொன்றாக
வீங்கு நீரினிற் பிறந்தது விளங்கு பேரண்டம்.

இதனால் உலகவித்து நாராயண உருவென்பதறி. இந்த அஷ்டாக்ஷர தேவருக்கு துலாம் மேல்பாகமாயும், சிங்கமுங் கன்னியும் நிருருதிதிக்கிலுமிருப்பதால், அத்திக்கின் அந்த அஷ்டாக்ஷர உருவராய் நாராயண உருவமாய் பிதாவை வரிக்கிறார்கள்.

பிதாமஹரூபமாய் வரிக்குந் தேவர் யாரெனில் பிதாமஹரை ருத்ரரூபமாய் வரிப்பதில், ருத்ர ரூபம் பதினொருகோடி. அந்த கோடிக்கொருவர் எஜமானர்கள். இவர்க்கெலா மாதார தெய்வம் தக்ஷிணாமூர்த்தி. இவர்க்கெலாம் பஞ்சாக்ஷரமே மூலமந்த்ரமாய் விளங்கும். அம்மஹா மந்த்ரத்திற்குப்பின் அம்சத்துக்குத் தக்கபடி காயத்ரிகளுமுண்டு. அப்படிப்பட்ட தக்ஷிணாமூர்த்தி உருவாகிய குருவிற்கு கடகம் உச்சஸ்தானமாதலால், அது அபஸ்வயமாய் வரிப்பதில், அஷ்டாக்ஷரத்திற்குப்பின் பஞ்சாக்ஷர தெய்வமாதலின், அவர் பிதாமகராய் வரிக்கப்பட்டார். அவர் நேர்தெற்கினு மாக்நேயத்தினும் நிற்பதால், அவரையும்-உத்தராபி முகமாய் ஆக்கினேய அருகில் வைத்து வரிக்கிறார்கள். அந்த தக்ஷிணாமூர்த்தி ஸர்வலோக குருவாதலாற்றான், அவர் வருணத்திற்கு குருவர்ணமெனலாயிற்று.

இனி பிரபிதாமஹர் ஆதித்ய உருவமென்றற்கு விவரம்:—ஆதித்திய உருவம் பனிரெண்டு கோடி. கோடிக்கொருவராகப் பன்னிருவர் எஜமானர்கள்; அப்பன்னிருவர் யாரெனில்:—தாதா (1) அர்யமா (2) மித்ரன் (3) வருணன் (4) சுக்ரன் (5) விச்வான் (6) பாஸ்கரன் (7) பகன் (8) த்வஷ்டா (9) விஷ்ணு (10) ககன் (11) பூஷா (12) இவ்வாதித்யருலகத்தில் ப்ரத்யக்ஷ தெய்வமாதலாலும், அவராலயே ஸகல கோட்களுக்கும் நாட்களுக்கும் ஒளியீய்ந்தும், உலகத்தில் சிருஷ்டி முதலிய முத்தொழிலும் நடாத்தி ரக்ஷிப்பதாலும், உலகத்தில் முக்கிய தெய்வமாய் வசித்து பிரம்மகாயத்ரிகு அதிஷ்டானதெய்வமாதலினாலும், அவர்க்குரிய காயத்ரியைப் ப்ராம்ஹணீகம் விளங்கும் பொருட்டு ப்ராம்ஹண பரம்பரையிலேயே அநுஷ்டித்து வருவதால், அச்சூர்யன் உலகில் எவ்வாறு ப்ரத்தியக்ஷ தெய்வமோ அப்படியே அந்த பீஜாக்ஷர உபாஸகராகிய ப்ராம்ஹணர்களையும், பூசுராளெனச் சொல்வது அத்தெய்வத்திற்கு மிக்க தெய்வமில்லாத ஸ்வயஞ் சோதியாதலாலும், அந்த மார்க்கமே ப்ரம்ஹசர்ய, க்ரஹஸ்த, வானப்ரஸ்த, ஸன்னியாஸிகளுக்கும், அதிவர்ணாச்சிரமிகளுக்கும், நிர்விகல்பசமாதிநிஷ்டாளுக்கும், முமுக்ஷுத்வ

மார்த்வகம் அதைவிட :வேறிலாமையினுலும், அவருருவமாய் ப்ரபிதாமஹவர்ணம் வரிக்கிருர்கள். அந்த வர்ணத்திற்கு அப்பால் வர்ணமில்லாமல் போய்விட்டது. இக்காயத்ரி அக்ஷரமும், அதற்கு அதிஷ்டானமாகிய சூரியனுகிய பிரம்மாவும், த்வாதசாக்ஷர, அஷ்டாக்ஷர, பஞ்சாக்ஷர, வாஸுதேவநாராயயண சிவ உருவாதலின், அத்தெய்வமெலாமிவரென்பது தோன்ற - அவருடன் இவரையும் வடக்குமுகமாகவே வைத்து வரிக்கின்ருர்கள். இதற்குச் சரியாய் முப்பாட்டன், பாட்டன் தகப்பன், கற்பத்திலிருந்து தான் நால்வரும் பிதாமஹரிலிருந்து உத்பவாரதலால் அந்த உத்பத்திக்ரமமாகவே படிப்படியாய் உயர்ந்தமைகாண்க. சூரியன் சர்வதேவாத்மகஸ்வருபமாம் கையால், அவர்க்கு பூர்ணபலமாகிய பரமோச்சஸ்தானம் மேஷம். அம்மேஷத்தின்காலம்-தேவர் தினத்தின் விதிப்படி உத்தராயணமாகிய தேவர் பகலில (15) நாழிகைக்கு மேல்-20-நாழிகைக்கு குதபகாலமென்றும், மாத்தியாந்திக காலமென்றும்; ஆனதால் அத்த குதபகாலத்தில் சகல ச்ராத்தம் முதலிய பிதுர்மேதமும், ஸூர்யனுக்கு பூரண ப்ரீதியாகும் பொருட்டு செய்வதென விதி ஏற்பட்டது :—

சூரியன் ஸகல தேவதா உருவமென்பதற்கு :—

பாகவதம்.

வையகம் படைத்திடு மலரி னண்ணலும்
பொய்யறு மாயனும் புகலு மீசனு
மைய்ய செங் கதிர்க ளோராயிரந் திகழ்
வெய்யவ னுமென விளம்பும் நூல்களே.

அக்காலத்தில் ஸூர்யவந்தநத்தில், முக்கியமான மாத்தியாஹ்நிகம் செய்யாமல் எந்தகர்மஞ் செய்யினும், அந்த கர்மம் நஷ்டமென்றும் முந்தி சூர்யனை உபாசிக்காத குற்றத்தால் தள்ளப்படுகிறதுபோல, தேவர்தினமாகிய வருஷத்திற் கொருதினம், பிதிர்யக்ஞம் முக்யமாய் செய்யவேண்டுமெனவும், அந்த பிதுர்யக்ஞமான இந்த மஹாயந்ரத்திலுள்ள, வாஸுதேவ, நாராயண, சிவ, ஸூர்ய உருவமான,

த்வாதசாக்ஷர பஞ்சாக்ஷர காயத்ரீதேவதைகளே, விச்வே தேவரிரண்டுகோடி, வஸுகணம் எட்டுகோடி, ருத்ர கணம் பதினெருகோடி, ஆதித்யகணம் பனிரண்டுகோடி ஆக முப்பத்தி முக்கோடி தேவருருமாய், விச்வேதேவ பித்ருபிதாமஹ ப்ரபிதாமஹரென்று வரித்து யந்த்ரதேவதைகளை பூசிப்பது, ஜகத்தில்வழங்கிவருவதால், இவைகள் எந்த்ர ஆராதனமே என்று நாடில் 'நீதிசே' ரென்றவிடத்தில், அசத்தில் வழங்கு நீதி எனச்சேர்க்கலாயின. இவ்வாறு, மாதா, பிதா, குரு. தெய்வம் என்னும், விச்தேதேவ பித்ரு, பிதாமஹ், ப்ரபிதாமஹபூஜையாகிய மும்மூர்த்தி பூஜை வருஷத்திற்கு ஒருதடவை ச்ராத்தமாயாவது பூசிக்காதவன், ப்ரஷ்டனுய் விடுவது நிச்சயம். இந்த ச்ராத்தமென்கிற மஹாயந்த்திரபூஜை இந்த யந்த்ரபூஜை என்றறியாமலே வழங்கிவரப்படுகின்றது,

'களிறனுழுதயராசிகோள்' நாடில் "நீதிசேர்" என்றற்கு, மற்றேர் உலகவிதம் ஒருவன் செய்யும் ச்ரார்த்தத்தில், முதல் ப்ராமணரை வரித்தல்,அக்நியி லாஹுதி செய்தல், விக்ரம் போடுதல், பிண்டம் போடுதல், தர்ப்பணம் செய்தல், இவைபஞ்ச மஹாயக்ஞமென வழங்கிவருகின்றன. யோசிக்கையில் இந்தமஹாயந்த்ராநுஷ்டானமாகவேயிருக்கின்றது. எவ்வாறெனில், ப்ராம் ஹணன்முகத்தினும் விகரம்வைப்பதும் வாஸுதேவப்ரீத்யர்த்தமாம், வாஸுதேவர்ஸம்ஸாரியாதலால், அந்தச்ரர்த்தவர்ணத்திற்குரிய ப்ராமணர் எல்லாரும் பத்கிஉடையவராகவே யிருக்க வேண்டும். அக்நியில் ஹோமம் செய்வது, ஸூர்யப்ரீதியாதலால், ஸூர்ய உபசரிப்புக்காகவே அக்நியிலுபசரிக்கிருர்கள். ஸூர்யனிடத்திலிருக்கும் பவமாநனென்கிறவ அக்நி உலகத்திலுள்ள சுசி என்னும் அக்நிக்கு சஹோதரனைகயால், அந்த ஸூர்யாக்நிக்கு ப்ரீதியாம் நிமித்தம் இந்தபூமியிலுள்ள சுசி அக்னியில் ஹோமம் செய்வதென்றும் ஆயிற்று.

பிண்டம் வைத்து அதிலாவாஹிப்பது ருத்ரப்ரீதியாம். எவ்வவாறெனில், ருத்ரருக்கு ருத்ரபலி என்று பிண்டத்திலே த்ருப்தியாதலால், அவர்க்குப் பிண்டம்போடுவது

த்ருப்தியாகும் ஜலத்தில் தர்ப்பணஞ் செய்கிறது ஜலத்தில் சயநிக்கும் நாராயண ப்ரீதியாதவன், பொருட்டு ஜலத்தர்ப்பணம் நாராயணரதென்ருயிற்று. ச்ராத்தவர்ணங்களெல்லாம் அபஸவ்யமாயும், செய்கையெல்லாம் ஸவ்யமாயும் செய்வதை இந்த மஹாயந்த்ரத்தில் உலக நடை என்பதறிக. 'நாடில்' 'நீதிசேர்' என்றதால், மற்ருேர்வகை சொல்வன் ஒருப்ராஹமணன் முதலில் ப்ருமசர்யத்தைப் பூண்டு, இரண்டாவதில் லறந்தாங்கி, மூன்ருவது வானப்ரஸ்தம்தரித்து, நான்காவது சந்யாசமாகிருன். இந்த ஆச்ரமம் (4)ம் அதிலுள்ள தவமெல்லா மிந்த மஹாயந்த்ராநுஸாரமாகவே ஆகிறது: இது இந்தயந்த்ர ஆராதனமென அனேகர்களுக்குத் தெரியாமலே அநுஷ்டித்து வருகிருர்கள். அது எவ்வாறெனில் முதலில் கர்பாஷ்டமத்தில் ப்ரஹ்மசர்யம் பூண்கிருர்கள். அந்தப்ரம்ஹசர்ய வ்ரதஸமா வர்த்தனத்தில், அஷ்டவ்ரதமென அநுஷ்டித்து வருகிருர்கள். அந்த ஆசரணையானது, இந்த மஹாயந்த்ரத்தில் அஷ்டாக்ஷர மூர்த்தியாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தி, முதலில் பற்றற்றவராய், சிதாகாசத்தினின்றுஞ் சித்ரூபியாய், உதித்தனரென சாஸ்த்தரங்கள் சொல்வதால், அவரொருவரே அன்றி மற்ருென்று மிலாதவராதலின், அவரது பீஜாக்ஷரம் எட்டாதலின், இந்த எட்டு அக்ஷரவிதிப்படி கற்பாஷ்டமத்தி லுபநயனம செய்வதென்றும், ப்ரஹமசர்யாந்தத்தில் மேலெழுதிய அஷ்டாக்ஷர ரூபமாய், அஷ்டமஹாவரதஞ் செய்யவேண்டுமென்றும், விதிகள் ஏற்பட்டன. ஸ்ரீமந்நாராயணர் பற்றற்றவரென்பதற்கு :—

பாகவதம்

பற்றெறிந்தவர் நாடும் பரமனுக்
குற்றுநோக்கி லுருக்குணமில்லென
முற்றுணர்ந்த முனிவன் மொழிதலும்
வெற்றிவேற்கை விதுரன் விளம்புவான்.

இந்தப்பாடலால் நாராயணர் பற்றற்றவரென்பதறிக.

விவாஹம்புரிவது க்ரஹஸ்தாச்ரமவிதி. அதின்ஸாரம் ப்ரஜாவிருத்தியேயாம், அப்புத்ர உற்பத்தியானது, ஒரு

பெண் பூத்துநீராடிய நாடொட்டு (12) தினத்தில் கர்ப்பம் அடைவதுவே, அதற்குப்பின் கர்பங் தரிப்பதிலே யாதலின், இந்த மஹாயந்த்ரத்திலமைந்த வாஸுதேவர், கர்பந்தோடு ஜகத்தெலாந்தாங்கும் உருவமாம். த்வாதசாக்ஷர மூர்த்தியாதலின் அவரது பரீத்யர்த்தமே, க்ரஹஸ்தம் பூண்பது, த்வாதசாக்ஷர ஞாயப்படி பனிரெண்டு தினத்தில்கர்ப்பந்தரித்தலால், வாசுதேவர்க்குரிய தென்றாயிற்று, அதற்கு;

### கூர்மம்

அருப்புமுலையார் பூப்பெய்திநீராட்ட யருநாண் முதலாத்
தெரித்தநாள்களீராறிற் றிங்கடோறு மகிழ்ச்சிறப்பக்
கருப்பமினிதி னூறுமளவுங் கலவாநுகிற் கருவழித்தோ
னுருப்பனரக மிவர்க்காகு மென்னமறைகளோதுமால்.

இந்தப்பாடலால் முன்சொன்னவை அறிக. வாநப்ரஸ்தம் காயத்ரிக்குரிய ஸௌர்யப்ரீத்தமாம், அது எவ்வாறெனில் ஸௌர்யன் சஞ்சரியாதலால் இவ்வாச்ரமியும் வனத்தில் சஞ்சரிப்பனெனவும், சூர்யன் அக்னிஆதலால் பஞ்சாக்கி மத்தியில் தவஞ்செய்வதென்றும், காயத்ரி (24) எழுத்தாலால் தத்வம் இருபத்திநாலையும் அடக்குவமதென்றும், இவ்வாற்றினால், சூர்யப்ரீதி என ஆயிற்று. ஸங்யாஸம் பஞ்சாக்ஷரத்திற்குரிய சிவார்த்தமாமென அறிக. அது எவ்வாறெனில், கங்காதரர் ஸதா தபஸ்வியாதலால், ஸநகாதியர்க்கு உபதேசிப்பவராய், பஞ்சாக்ஷரத்திற்கு தெய்வமாய், தக்ஷிணாமூர்த்தியாகிய குருவிற்கு, கடகம் உச்சஸ்தாநமாதலாலும், அது சந்தரனுக்கு பூர்ணபலந்தரும். ஸ்வக்ஷேத்ரமாதலாலும், இம்மஹாயந்த்ரந்திலுள்ள சிவரூபமான தக்ஷிணாமூர்த்திக்கு த்ருப்தியாகும்பொருட்டு, ஆசை அற்றவாகளாய். ஸகலமுந்துறந்து, மெய், வாய், கண், மூக்கு செவி புலன்வழிசெல்லாவண்ணம் அடக்கி குருவெனப் பெயர் பெற்று, ப்ரம்ஹக்ஞானவான்களாய். சந்த்ரஉருவாகிய மனதை அடக்கி நிற்கின்றார்கள். அவ்வாறு புரியும் ஸங்யாசமானது சிவப்ரீதியாம். இவ்வாறு நாட்டில் வழங்குஞ் செய்கை 'மாகனிறநுனுதயராசி' என்றற்கு ஓர்சிறப்

புறை ;—மகத்தான பஞ்சாக்ஷர, அஷ்டாக்ஷர, த்வாதசா க்ஷர, காயத்ரி எனலால், மஹத்தென்றல்பஞ்சாக்ஷரமா னது எத்தன்மைய தெனில் :—

ப்ரஹமோத்தரகாண்டம்

1. ஐந்தெழுத்தி னுண்மருவிநாமாருயிர் சென்று
சிந்தைகாணருஞ் சிவபதஞ் செறிந்திடுந் திறந்தா
லித்த மந்திர நிலை பரப்பிரமமே யென்பர்
வந்தனைத் தொழில் சச்சிதாநந்த சின்மயத்தோர்.

2. முக்கணுயகனமரருண் முதல்வனு மதுபோற்
றக்க மந்திர மெவற்றினுந் தலைமை யைந்தெழுத்தே
தொக்க நான்மறைப் பிரணவ மாதியர்த் தொடங்கி
யொக்க வோதியே யளப்பிலர் பரகதியுற்ருர்.

எனலாலிவை ப்ரஹ்மஸம்பந்தமான மஹாயந்த்ர மெனல்காண்க :

இந்தமந்திரத்தால் பேறுபெற்றவர் அப்பர், ஸுந்தரர், மாணிக்கவாசகர், சம்பந்த்ர் முதலிய அறுபத்து மூவரும் ப்ரஹமோத்தர காண்டத்திலும், உபதேசகாண்டத்திலும், சொல்லிவருமனேக அன்பரும், அளவுகடந்தவர். மேலு மிந்தமந்த்தரமே காயத்ரியாயநுஷ்டிக்கும் அநேக சைவர்க் கும், உட்சமயமாகிய வைரம், வாமம், காளாமுகம், மஹா வாதம், பாசுபதம், சைவம், இந்தஸமயங்களுக்கும் அந்த ஸமயபீசாக்ஷரமாய் நிற்றலும், சத்யோஜாதம், வாமதேவம் அகோரம், தற்புருஷம், ஈசானம் என்கின்ற, மடாசார்யத்வ மாக்கலும், அந்தமடத்துக்குரிய சிஷ்யாளை வஹித்தலும், இந்தமகாமந்த்தரமே.

அஷ்டாக்ஷரமானது, ஆதியில் பரம்ஜோதி உருவமாய், ஸ்ருஷ்டிக்கு ஆதிகாரணமாகியதும், ப்ரஹ்லாத ஆழ்வானை அவர்தகப்பனுல் நேரிட்ட ஆபத்துக்கெல்லாம் ரக்ஷித்தும், அஜாமினளன் முதலிய அனேகம் அன்பர்களை சுத்தாளாக்கி யதும், மற்றுமுள்ளதேவர்கள், நாகர்கள், முதலிய அனே

கம் அன்பரை தன்யாளாக்கியதும், ஆழ்வார்களாகிய பரம பாகவதர்களை அடிமையாக்கி ஸ்ரீமந் நாராயண னருளீந்ததும், ஸமயாசாரபத்ததியாய் ஆசார்யர்களாக்கி ஸமாச்ரயங்கள் முதலியவும் செய்ய சிஷ்யானுமாகுகையும் இவ்வஷ்டக்ஷரமே.

த்வாதசாக்ஷரம் ஆதியில் ப்ரளயகாலத்தில் நம்பெருமாள் ஆலிலையின் மேல் பள்ளிகொண்டிருந்து ஸகல அண்டபுவநகோடிகளும், விதைகளும் நசிக்காமல் தனது உந்திக்கமலத்தில் வைத்து காப்பாற்ற உருவமாய் நின்றதும், மார்க்கண்டேயர் ஆறுமனுகாலம் தவம்செய்ய அவர்க்கு ப்ரளயங்காட்டியதும், த்ருவனுக்கு தேவருலகத்திற் கெல்லா முயர்ந்த விஷ்ணுபதமருளியதும், அநேக மடாதிபதிகள் சிஷ்யாளை வஹித்ததும், தேவர்க்ளுக்கமுதமீந்ததுமாம்.

ப்ரஹ்மகாயத்ரியின் விசேஷம்யாதெனில்:-ப்ரம்மர் ஆதியில் தாமரை மலரில் ஜனித்தகாலையில் ஒன்றுங்காணுமல் தானுறையுந் தாமரைமலரை மாத்திரங்கண்டு திகைத்து, நாளத்தின் வழியேபோய் தேவவர்ஷத்தில் ஆயிரம் ஆண்டு தேடியும் யாரையுங் காணுமல் வெளிவந்து பின்புறம் திகைக்குங்காலத்தில், சிதாகாசத்தில் தப என அசரீரியாய் ஒருவாக் ஜநிக்க, அந்த என்னுமெழுத்தை ஆதியாய் ஜபித்து தவஞ் செய்ததின் பேரில், பகவத்ஸந்தர்சநமாய் உலகை ஸ்ருஷ்டித்தும், இக்காலையினும் ப்ராஹ்மணர்களை எக்குலத்தோரிலும் முதல் வராக்குகையும், இருபிபறபுறச் செய்ததும், ஞாநபூரிதாளாக்குகையும், விச்வாமிதரர் முதலிய ரிஷிகளுக்கு நிக்ரஹாநுக்ரஹசக்தியை யீந்ததும், இருபத்திநன்கு அக்ஷர உருவான இம்மஹாமந்த்ரமே.

"நாடிலேகாதசர்நால்வருச்சரே" என்றதற்கு சிறப்புரை சொல்வன் இதை 'நாடு ஏகாதசர்நால்வரில்' 'உச்சரே எனக்கொள்க. அதனுல், பூமியிலவதரித்த பதினெரு அவதாரங்களில் நால்வருக்குள் இவர் உயர்ந்தவரெனலாம், "நாடில் ஏகாதசர்" எனலால் விசும்பில் ஏகாதசர் வருவிக்கப்பட்டது, அதற்கு :—

பாகவதம்.

இருபதோ டிரண்டெனு மவதாரங்கண் முறையே
மருவு மிப்படி மாயவன் கலைகளா லின்னுங்
கருது சீரவதாரங்கள் கணக்கிலை எண்ணில்
அரிய வாரிதி மணலினு மநேகமென் றறைவார்.

இதனு லிருபத்திரண்டு அவதாரங்கள் விசேஷமென்று அறிக அவற்றுள் :—

| அயோநிஜம் (11) | யோநிஜம் (11) |
|---|---|
| 1. விராட்புருஷர். | 1. நாரதர். |
| 2. நீரில் சயநிக்கும் நாராயணர். | 2. தத்தாதரேயர். |
| 3. ஸநகாதியர். | 3. கபிலர். |
| 4. வராஹம். | 4. வாமநர். |
| 5. ஹம்ஸம். | 5 விருஷபயோகி. |
| 6. நரசிங்கம். | 6. யாகபுருஷர். |
| 7. மோஹிநி | 7. நரநாராயணர் |
| 8. தன்வந்த்ரி. | 8. வ்யாஸர். |
| 9. கூர்மம். | 9. பரசுராமர். |
| 10. மத்ஸ்யம். | 10. ப்ருதுசக்ரவர்த்தி |
| 11. ஹயக்ரீவர். | 11. ஸ்ரீராமர் |

இந்த யோநிஜமாகிய 11.-வருள் ப்ருது-1, ரிஷபர்-2 வாமநர்-3, இராமர்-4, இந்நால்வரும் உலகத்திலுள்ள செல்வத்துளெல்லாம், அரசென்கிற செல்வமே மேலான தாதலால், அச்செல்வந்துய்க்க அவதரித்தாரேனும், ப்ருதுசக்ரவர்த்தி, தன் தகப்பன்நாளில் இழந்த பாக்யமெல்லாம் தான் ஸ்வயார்ஜிதமாய் ஸம்பாதித்தார். விருஷப யோகி (40) லக்ஷம்வருடம் அரசாண்டும், சத்துருவை வெல்லாதிருந்து நெடுநாளைக்குப்பின் ஒருமதமேற்படுத்தினர். வாமநருக்குப் பதினைன்கு உலகுங் கிடைத்தும், அதனை அன்பர்க்கருளி, தான் உபேந்த்ரரானர். ஆதலாலிந்த மூன்று அவதாரங்களிலும், ஓர் குறை உண்டாயிருந்தது.

இவ்விராமரோவென்ருல் ஸகலசெல்வத்துடன் அவதரித்த தால் உயர்ந்தவரே என்ருர். இவ்யந்த்ரவிருத்தாந்தத்தை, யஜுர்வேதம் நாலாங்காண்டம் முதல் ப்ரச்நம் (உஉ) வது பஞ்சாதியில் சொல்லியிருக்கின்ருர்.

நான்காவது உரை—முற்றிற்று.

## ஸ்ரீராமஜாதக மஹாயந்த்ரம்

இஃது, 4–ஆவது உரையில் வருமாறு காண்க :

| | | | |
|---|---|---|---|
| சுக்ரன்-12 | சூரியன்-3<br>புதன்-9 | | கேது-9 |
| | பிரம<br>காயத்திரி | பஞ்சா<br>க்ஷரம் | லக்னம்-4<br>சந்திரன்-4<br>குரு-5 |
| குஜன்-6 | துவாதசா<br>க்ஷரம் | அஷ்டா<br>க்ஷரம் | |
| ராகு-3 | | சனி-12 | |

இந்த யந்த்ரத்தின் மந்திரங்களை இதில் சொல்லிய விதிப்படி ஜபித்து ஆராதிப்பவர்க்கு, சகல நோயுந் தீர்ந்து புத்திர திரவியாதி சம்பத்துக்களும் உணடா மென்பது ஐந்தா முறையில் விளங்கும்.

## ஐந்தாவது உரை

இதனுல் யந்த்ரஸ்தாபநதேசமும், பலனும் அறியலாம்.

"நீடுறுமாலே கற்கடக நீதிசே ரோடைமாகளிறனுனுதய ராசிகோ ணுடி லேகாதசர் நால்வருச்சேர" என்பதை 'கல்' 'கடகம்' 'நீ; 'தி' 'சேரோடை' 'மா' இவைகளில் "களிறனுனுதயராசிகோணுடில்" ஸ்ரீராமரது 'உதயம், ஜன்மலக்கத்தையும்; 'ராசி' பதினுறு வீட்டையும், 'உதய ராசி' எனலால் பஞ்சாக்ஷர, அஷ்டாக்ஷர, த்வாதசாக்ஷர, காயத்ரி இதனையும், 'கோள்' நவக்ரஹங்களையும், 'நாடில்' நாட்டுவையாகில், 'மா' 'மதி' 'மால்' 'ஐ' 'நாடு' 'இல்' இவைகள் முதலா உடைய 'நீதிசேர்' அததற்குரியவைகளைச் சேர்ப்பையாகில், அதற்குரிய பலன்கள் உறும் கிடைக்கும். அஃதெவ்வாறெனில் :—

"கல்' என்ருல் சிலே உறுவமாய் நின்ற தெய்வங்களிடத்தும், 'கடகம்' என்ருல்-கடத்தில் ஜலம்பூரித்து ஜபஞ் செய்யுங் கும்பத்தினிடத்தும், 'நீ' என்ருல்-அன்பர் முதலிய முன்னிலேயிலும், 'தீ' என்பது-'தி' எனக் குறுக்சல் விகாரமாய் நின்றது, 'தீ' என்ருல் அக்நியினிடத்தும், 'சேரோடை' என்ருல் பொன், வெள்ளி முதலிய பஞ்சலோஹத்தால் சேர்க்கப்பட்ட தகடுமுதலிய ரக்ஷையிலெனவும், 'மா' என்ருல்-விபூதிமுதலிய தூளியாயிருக்கும் வஸ்துக்களிடத்தும், 'களிறனுனுதயராசிகோணுடில்' எனவே கல்லினுட்டு கலாவது, ஸ்திரமாய் பூஜைசெய்யப்பட்ட விஷ்ணுவிக்ரஹம், சிவவிக்ரஹம், ஐயனுர், பிடாரியார், மடம், ஸத்ரம்: அரண்மனே, யாகசாலே, நீதிஸ்தலம், சரபூஜை செய்யப்பட்ட உத்ஸவவிக்ரஹங்கள், கண்ணுடி படம் முதலிய வற்றிலும், அடியிலாவது, நடுவிலாவது, தலேயிலாவது, 'களிறனுனுதய்ராசிகோள், கோதண்டபாணியினது ஜன்மலனராசிக்ரஹநிலேபஞ்சாக்ஷர, அஷ்டாக்ஷர. த்வாதசாக்ஷர, காயதரி இவற்றை, 'நாடில்' 'பொறிப்பில்" 'மா' 'நீடுறும்' எனவே லக்ஷ்மீகடாக்ஷங் கிடைக்குமென்றதால், மஹிமை மிகவும் உண்டாமென்ருர்.

கடகமென்னும் பூர்ணகும்பத்திருட்டுதலாவது, வ்ரத ஆராதநநிமித்தம் வைக்கும் கும்பம், சாந்திகலசம், மாரியம்மன் வேப்பிலை வைக்குங் கலசம், தீர்த்தயாத்ரா கமநகலசம்; தைலம்; ஔஷததைல முதலிய ஜலம்போன்ற வஸ்துபூரிதமாயிருக்கும் கலசங்களில் 'களிறனுனுதயாராசி கோனுடில்' இந்த ராமஜாதக மஹாயந்த்ரத்தைப் பொறிப்பில் 'மதிநீடுறும்' புத்திகூர்மையாம் என்றார். எனவே, பத்திமழுங்குதலே காரணமான பித்தன், விளையன், அறிவினன், அசீலன், சூதகன், நோயன், கோபி, தூர்த்தன், காமி, மோஹி, பிணக்கன், அக்ஞானி இவர்கள் முதலியோருக்கு அந்நீராட்டின் அந்நோய் நீங்கி புத்தி கூர்மையாமெனலாயிற்று.

'நீ' என்றால்-உன்னிடமென்றாயிற்று உன்னிடமென்றால் உன்னிருதயத்திலும், பிணங்குங்கால் மிடத்தில் பாரியும், தனக்கு வசப்படாத பாரியினிடத்தில் கணவனுடன் தெய்வத்தை பூஜிக்கும் அன்பனும், அத்வர்யுவினிடத்தில் ஆவாஹிக்கும் யஜமானனும், செல்வரிடத்தில் அவர் ஸமூஹம் பார்த்துறையும் வறிஞனும், பாகவதரிடத்தி லடிமை செய்யும் அடியாரும் பூதாவேச பிசாச ப்ரதிபந்தங்கள் விமோசநஞ்செய்ய தெய்வ உபாசனத்தில் முயலும் மந்த்ரசாஸ்த்ரக்ஞனும், கொடுமையான வாஹனத்திடத்தே ஊர்பவனும், திருக்குற்று நிற்கும் ஆ, மேதி, யானை ஆடு முதலிய ம்ருகங்களினிடத்தே ஆள்பவனும், "களிறனுனுதயாசிகோள்நாடில்" இந்த மஹாயந்த்ரத்தைப் பொறிப்பில் "மால்நீடுறும்" என்றார். எனலால், அதுகளுக்குரியவரிடத்தில் வசப்படாமலிருக்குந் திருக்கு நீங்கி ஆசை மிகவும் உண்டாகுமென்றார்.

"தீ" என்றால் ஔபாஸநாக்நினி, லோஹங்களை உருகச்செய்யும் அக்னி இவைகளில் இந்த மஹாயந்த்ரத்தை 'ஐ' 'நீடுறும்' என்றார். ஐ என்னும் அழகு மிகுமென்றார். அழகு கெடுக்கும் திறம் என்னெனில்.—குஷ்டம், பித்த வீக்கம், விதைவீக்கம், மூத்ரகிர்ச்ரம், சூணுவயிறு, அங்கஊனம்.

மேஹம், சூலை, பிடிப்பு, காக்கைவலிப்பு, நபும்ஸகத்வம் முதலிய அங்க உருவத்தைக் குறைவுப்டுத்தும் இத்யாதி

வியாதி நீங்கி அழகுறுமென்றார், "சேரோடை" என்றார் சேர்க்கப்பட்ட என்றதால், பொன், வெள்ளி, செம்பு, ஈயம், இரும்பு முதலியவற்றால் சேர்த்துச் செய்த 'ஒடை. பட்டமென்றாயிற்று. பட்டம் தகடு உருவாதலால் இங்கே தகடு எனக் கொள்ளப்பட்டது. எனவே, பஞ்சலோஹம் சேர்ந்த தகட்டில் "களிறனுனுதயராசி கோணுடில், முன் சொல்லியவண்ணம் ஸ்ரீராமஜாதக மஹாயந்த்ரத்தைப் பொறிப்பில் 'நாடுநீடுறும்' என்றார். 'நாடு' எனலால், க்ராம மெனலாயிற்று அதனாலுழுதோரழிற்குறிய தென்னும் நீர், நிலம், ஆள், அடிமை, வ்யாபாரம், ராஜ்யத்வம், உத்யானவனம் முதலிய உலகச் செல்வமெலாம் மிகவுமுண்டாகு மென்றார். 'மா' வில் நாட்டில் என்றால் விபூதி, குங்குமம், கலம்பப்பொடி, ஔஷதசூர்ணங்கள, மணல், அரிசி முதலிய எழுத்தெழுத உரியவாய் மாவைப்போலிருக்கும் வஸ்துவில் 'களிறனுனுதயராசிகோணுடில்' ஜாநகீகாந் தனுடைய ஜாதக மஹாயந்த்ரத்தைப் பொறிப்பில் 'இல்' நீடுறும் எனலால், குடும்பத்திற்குரிய ஸ்திரீகள், பிள்ளைகள் பெண்கள், தனம், தான்யம், ஆள் அடிமை, பந்துக்கள், யசஸு, வித்தை, நோயின்றி வாழ்க்கை முதலிய இல்லற விருதத்திற்குரிய சம்பத்தெல்லாம் மிகவும் செழிக்கு மென்றார்.

வினு:—கர்கடகமென்னும் ஸம்ஸ்க்ருதபதத்தை வல்லின-றகரமாக்கி, கல்-கடகம் எனப் பிரித்ததெவ்வாறும்?

விடை:—கர்கடகமென்னும் பதம் ஸம்ஸ்க்ருதத்திற்கே உரியதென விதி எங்குளது? வடமொழிகர்கடக மெனில் தமிழில் இணைந்தியல்காலை யாலக்கிகரமும், ரவ்வழியுவ்யுவுமாம் என்ற விதிகளின்படி, கரிக்கடக மென்றாவது, கருக்கடகமென்றாவது ஆகவேண்டும் அவ்வாறாகாமையின் அடையடுத்த பெயராய்-நண்டுக்கு வலைகல்லுந் தொழிலினால் கற்கடக மென்றார. இதன்கு முதலாவதுரையில் 'நாடு' என்னும் பெயர் மிதுகத்திற்கு வந்ததற்கு, சினேந்திர மாலைப்பாடல் சொன்னேனே அதன் தனிச்சொல்லில் 'தோடல்வன்' என தோண்டுகின்ற அலவனென்று

சொல்லியிருக்கின்றார். அதனால் வளைதோண்டும் அலவனென்றாயது போ விவரும்கற் கடகமென்றார்.

இவ்வாறுவகை ப்ரயோகங்களில் ஒருவர் தமக்கிருக்குங் குறைவு நீங்குவதற்கு எவ்வாருய் ஏவ்விடத்தி லிந்த யந்த்ரத்தை நாட்டி பூசிக்கவேண்டுமோ, அந்த அந்த விடத்தி லவ்வாறு பூசிப்பாராகி லதற்குரிய பயனைப் பெறுவரோன்பதாம்.

வினு:—பூஜித்து ஜபிப்பனென்றீரே அது இப்பாடலிலெங்கே சொன்னர்?

விடை:—"களிறனுனுதயராசி கோள்நாடி லேகாதசர்நால் வருச்சரே" என்றார் இதனலெந்தவிடத்திலாவது ஸ்ரீராமஜாதகமஹாயந்திரத்ரத்தை நாட்டு வானுகில், 'ஏகாதசர்நால்வருச்சரே' என்றார். இங்கே ஏகாதசம் என்பதை; ஏகம் தசமெனவும், நால்வரொன்பதை- நாலுபடித்தரமெனவுங் கொள்வையாகில், க-க0-க00-க000-என்ருகும் 'உச்சரே' என்றதற்கு, உச்சரிப்பவரோனப் பொருள் கொள்க. எனவே இதிற் சொல்லிய நான்கு மஹாமந்த்ரங்களும் ஆயிரம் உரு உச்சரிக்கவேண்டுமென்ருகிறது. இதற்கு மந்த்ர சாஸத்ரம்.

சுலோகம்

सवातवृत्तं ऋतुकोणलक्ष्मीं
मायाश्चचिन्तावृततारसाध्यम् ।
आराध्ययन्त्रं प्रतिपत्सहस्त्रं
आकर्षणश्चाशुचराचराणाम् ॥

मगिरसमायामध्ये शूचठकारताराः
ग्रहयुतसाध्यवीज वृत्तलेखानुमध्ये ।
हरिप्रणवसमेतं मन्त्रमापेत्सहस्त
ग्रहसतिक्षुद्र भूतग्रस्तमावेशसिद्धम ॥

இந்த சுலோகங்களின் கருத்து:—இந்த மஹாமந்த்ரங்களை ஆயிரம் தரம் உச்சரித்தால் பூதாவேச முதலிய

க்ஷேத்ரகங்ளும் போய்விடுமென்பது, ஒன்று பத்துக்கு மேல் 'நால்வர்' என்றது நாலு படித்தரமாக,-௧௦௦-௧௦௦௦-௧௦௦௦௦-௧௦௦௦௦௦ மென்றும் அர்த்தங்கொள்ளும்:— 'உதய ராசிகோள்நாடில், 'நீதிசேர்' 'மாலைநீடுறும்' எனலால்-'உதயராசி' பஞ்சாக்ஷர, அஷ்டாக்ஷர, த்வாதசாக்ஷர, காயத்ரிகளும், 'கோள்' நவக்ரஹங்களையும், 'நாடில் மஹாயந்திரத்தில் ஸ்தாபித்தால் - 'நீதிசேர்' அத்தன் ஸ்வரூபம், தொழில் குணங்களுக்குரிய பலன்களை கூட்டும். 'மாலை நீடுறும்' எனலால்-எந்தராசி, க்ரஹம், மந்த்ரங்களுக்கு எந்த பலன் உரியதோ, அது ஒழுங்காய் பங்கமின்றிக் கிடைக்குமென்பதாம். எவ்வாறெனில்:—வருஷபம் சிவ வாஹநமாதலாலொருவன் உழுதொழிற்குரிய மாடுகள் வ்ருத்தி அடையும் பொருட்டும்மாட்டுவியாபாரம்வ்ருத்தி அடையும் பொருட்டும், மாட்டு நோய் நீங்வெும். அபேக்ஷையுள்ளவன் இந்த ராமஜாதகம் எழுதி அதிலிருக்கும் வ்ருஷப ராசியில் அர்ச்சித்து பூசித்து அத்ற்குரிய பஞ்சாக்ஷரத்தை ௧௦௦௦-உரு உச்சரிப்பனுகில் அவன் கோரிக்கை முற்றுபெறுமென்றும், ஒருவன்குடும்பியாய்ஸ்த்ரீயுடனிலை பெற்ற வாழ்வை யிச்சிப்பவனும், கான வித்தையை இச்சிப்பவனும், விவாஹம் செய்துக்கொள்ளப்பட்டவனும் இம்மஹாயந்த்ரத்திலிருக்கும் மிதுநத்தை மனதில்பாவித்து அதிலிணை பிரியாத அரத்தநாரீச்வரரூபமாயிருக்கும் தேவதையை த்யாநித்து, அதற்குரிய பஞ்சாக்ஷரத்தை ௧௦௦௦-உரு உச்சரிப்பனுகில் அவனது எண்ணப்படி கைகூடுமென்றும், நல்ல ஆபரணங்கள் பூண்டுகொள்ள இச்சையுள்ளவன், இம்மஹாயந்த்ரத்திலிருக்கும் கடகராசியை அர்ச்சித்து பூசித்து, அத்ற்குரிய பஞ்சாக்ஷரத்தை ௧௦௦௦-உரு ஜபித்து நடேசனை த்யாநிப்பானுகில், அவன் நினைத்தபடிக்காகுமென்றும், கொலை, களவு, வஞ்சனை, பழவினைத் தொடர்புநோய், தன்னை அணுகாமலிருக்கும்பொருட்டும் துஷ்டரது கொடிய எண்ணந்தன்னை அணுகாமலிருக்கும் பொருட்டும், எண்ணமுள்ளவர் அக்நி உருவமாய் ருத்ராம்சம் பெற்று, மிதுநத்திலிருக்கும் கேதுவை த்யாநித்து அர்ச்சித்து பூசித்து அவர்க்குரிய பஞ்சாக்ஷரத்தை ௧௦௦௦-உரு உச்சரிப்பாராகில் அவர்கோரிக்கை நிறைவேறுமென்

றும், தமக்கு குரு உபதேசம் பலிக்கும்பொருட்டும், தாம் உபாசித்த தெய்வம் ப்ரத்யக்ஷமாகும் பொருட்டும், மனக் கவலை நீங்கும் பொருட்டும், ராஜயோகம் சித்திக்கும் பொருட்டும், இந்த மஹாயந்த்ரத்தை த்யாநம் செய்து அதில் கடகமாகிய கீர்த்திஸ்தாநத்தினிற்கும் தக்ஷிணு மூர்த்தி அம்சமாய் உச்சராகிய ராஜாவை அர்ச்சித்து பூஜித்து த்யாநித்து அதற்குரிய மூலமந்த்ரமாகிய பஞ்சாக்ஷ ரத்தை க000-உரு உச்சரிப்பாராகில் அவர் நினைத்தவாறு முற்றுமென்றும், முத்து, மாணிக்ய வ்யாபாரஞ்செய்யும் பொருட்டும்,பசு எருது முதலிய கால்நடைவ்ருத்தி அடை வதற்கும், அந்த விலங்கிநோய்களை தீர்த்தற்பொருட்டும், மாத்ருவம்சம் வ்ருத்தியாகும் பொருட்டும், தோப்பு வைக் கவும், கிணறு தோண்டவும், குளம் வெட்டவும் பயிர் வளம் நீர்வளம் மிகவும், கப்பல் முதலியன செய்யவும் விதைவிதைக்கவும், இந்த மஹாயந்த்ரத்தை மனதில் த்யா னித்து கங்காதரரது ஜடாமண்டலத்தில் விளங்குங் கடக சந்த்ரனை அர்ச்சித்து பூஜித்து, அவர்க்குரிய பஞ்சாக்ஷ ரத்தை க000-உரு உச்சரிப்பாராகில், அவர் நினைத்த தொழில் முற்றுமென்றும், இவ்வாறு பஞ்சாக்ஷரம் நின்ற நடு அறையை பக்கத்தில் சூழ்ந்த வ்ருஷபம்,மிதுனம்,கட கம்,கேது,குரு,சந்த்ரன் இவர்களுக்கெல்லாம் பீஜாக்ஷரமா நின்றதா லிவர்கள் குணந்தொழிலாலுண்டாகும் நன்மை பெல்லாம் அன்பர்களை அடையுமென்றும், ‘மாலைநீடுறும்’ என்றதால் வருவிக்கப்பட்டது.

ஸிம்ஹராசியின் விசேஷம்:—சிங்கமானது ப்ரஹலாத னது பாவனைப்படி தூணினிடத்தே தோன்றி ஸாயங்கால ஸமயத்தில்: ஹிரண்யனைக்கொன்று,இராத்ரி நாழிகை 5-க்கு மேல் ப்ரஹலாதனை அருளிகின்ற முஹூர்த்தம். ஐந்து நாழிகை என்பதெவ்வாறெனில்:—தக்ஷிணாயநம் தேவர்க் கிரவென்றும், உத்தராயணம் பகலென்றுஞ்சொல்வது. அதில் தக்ஷிணாயந ஆதிகடகமாத மாதலின் அது குரு வுக்கு உச்சவீடாயும், சந்த்ரனுக்குஆட்சியாதலாலும்,குரு வும் சந்த்ரனும் சிவாம்சரூபத்திற்கு அதிபலமான உச்ச ஆட்சிஸ்தாநமாதலின், அது தேவர்ஸந்தியாகாலமும், இர வில் 5-நாழிகைவரையிலாதலின், தேவர் ஸந்திபோல்

மனுஷ்யமனத்தையுங்கருதி தினம் ஸந்தியாகாலத்தில் சிவ பூஜையே விசேஷமென்ருயிற்று. அவ்வாருகிய இரவில் ஐந்து நாழிகைக்குமேல் பத்து நாழிகைக்குள் சிங்கத்தின் காலமாதலின், அக்காலையிலேயே நாராயணரை வணங்க வேண்டுமென்ருயிற்று. இத்தன்மையவாய சிங்கத்தை தித் காலையிலிந்த மஹாயந்த்ரத்தில் பிரஹலாதனைப்போல்வழுஅக் அர்ச்சித்து பூஜித்து, அதற்குரிய அஷ்டாக்ஷரத்தை ௧000 -உரு உச்சாிப்பாராகில் சிங்கத்தைக் கண்ட அல்ப மிரு கங்களைப்போல் சத்ருக்கள் அணுகார்கள். துஷ்டக்ரஹங் களும், ஒருவன் சாபமும், இடி, தண்ணீர் காற்று இவற் ருல் யாதொரு ஆபத்துகளும் நேரிடாது.

கன்யாராசி-சிதாகசருபமாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தி தன்னையே கதியென்றடைந்த அன்பரை ரக்ஷிக்கும் பொருட்டு மோஹிநிருபத்தோடு பக்திஹீனர்களாகிய அசு ரரை வஞ்சித்து தனதன்பருக்கு அமுதீந்த கன்யாராசியை தோணியின்பேரிலிருப்பவளாய் நினைத்து ப்ரார்த்தித்து இம் மஹாயந்த்ரத்தி லர்ச்சித்து பூஜித்து, அதற்குரிய அஷ்டா க்ஷரத்தை ஆயிரமுரு உச்சாிப்பாராகில, -நோய்-வறுமை- தளர்ச்சி, அங்கஹீநம் முதலியனவின்றிஅரோகத்ருடஸ லக்ஷணமுண்டாய் தீர்காயுஸும் பெற்று வாழ்வார்கள்·இர வில் 10- நாழிகைக்குமேல் 15- நாழிகைக்குள் நிசிவ்யா பகமான காலமாய் க்ஷீராப்தியி லிருக்கும் தனது ஜோதிர் மாநமே தோணியாயமைந்த ரூபமாதலின், துலாராசி ஸ்ரீமந் நாராயணமூர்த்திவடிவாய் அவரவர் இருவினைகளைச் சீர் தூக்கி நிற்கும் ஸமகுணம்பற்றியே, துலாத்திற்கு ஜலா ராசியெனப் பெயருற்றது. அந்நீரில் சயநிப்பவர் ஸ்ரீதரரென் பது தோன்ற, சனிபகவானுக்கு உச்சராசிதுலாமென்றும் அவர் கரியவனென்ற முகுந்தருருவாதலின், ராத்ரி 15- நாழிகைக்குமேல் ௨0 - நாழிகைக்குள்ளாக ஸகல ஜநங்க ளுக்கும் சயனகாலம் அதனுற்ருன் அக்காலம் நிசியென் றும் ஸர்வத்துக்குத் தள்ளுபடியென்றும், அந்நித்திரை யின்கண்ணே பகல்துய்க்கும் ஆஹாரத்தை ரக்தமாக்கி உடம்பெலாம் பரவி வளர ரக்ஷிக்குங்காலம் இதற்காதலின் அவ்வீசனுக்கு ரக்ஷனை தொழிலொன்றும் ஆயிற்று. ஆதலால், துலாத்தை அர்ச்சித்து பூஜித்து அதற்குரிய அஷ்

டாக்ஷரத்தை-கοοο-உரு உச்சரிப்பராகில் அந்தடக்தருக்கு துஷ்காலம் நீங்கி சத்காலம் மிகும். வியாபாரம் வர்த்தகம் உயரும். வினைவலையினின்றும் விலகிவிடுவர். நிசிசஞ்சார மான துர்த்தேவதைகள் சங்காகுணங்கள் அணுகாது. ஜல ரோகமாவது, ஜலகண்டமாவது நேரிடாது. பூதபவிஷ்ய வர்த்தமான காலமும் அறிவர். துலாத்தில் சனி நிற்பதால் அவர் விஷ்ணுவெனுமாகாயத்திற்கு அதிபராதலால் விஷ்ணு வெனும் பெயர்க்குரிமையாய், மும்மூர்த்தி உருவாய் ஸூர்ய புத்ராதலானும், யமன்சஹோதரராதலாலும்; ஆயுளை அளக்கும் ஸூர்யபுத்ரத்வத்தினாலும், அவருக்கு ஆயுஷ்கா ரகனெனப் பெயரமைந்து ஸ்வாதி நாலாங்காலில் நின்ற தால், ஸ்வாதி காற்றுருபமாதலால் பத்மநாபருருவாகிய சனி பகவான் காற்று நக்ஷத்திரத்திலேறியதால், ஸ்ரீ ராம ருக்கு வாயுகுமாரர் வாஹநமானார். இத்தன்மையராய சனி பகவானை மஹாயந்த்ரத்தில் த்யாநித்து அர்ச்சித்து பூஜித்து அவர்க்குரிய அஷ்டாக்ஷரத்தை ஆயிரமுரு உச்சரிப்பாரா கில், சரீரத்தினோயின்றி நிஷ்களங்கமான உள்ளத்தோடும் தீர்க்காயுளுற்று யமபாதையற்று நித்யானந்தத்தையடை வார்கள். மனோசஞ்சலமற்றுறைவார்கள். 'நீதிசேர்மாலை நீடுறும்' எனலால், அஷ்டாக்ஷரத்தை சூழ்ந்த நான்குஆவ ரணங்களாலும், அதற்குரிய குணங்கள்வருவிக்கப்பட்டன வ்ரிச்சிகம் விஷஜந்துவாதலால், நாகமெனக்கொள்ளப்பட் டது.

வினா:— வ்ருச்சிகம் தேளாய் ப்ரசித்தமாயிருக்க அதைப் பாம்பெனச் சொல்வது எவ்வாறாகும்?

விடை:—வ்ருச்சிகம் விராட்புருஷனுக்கு ஆண்குறிஸ்தா னமாய் அது ராஹுவென்னும் பாம்பிற்கு அதிபல மான உச்சஸ்தாநமாதலால், பாம்பின் வர்க்க மென்று கொள்ளப்பட்டது. வ்ருச்சிகம் ராஹு விற் குச்சஸ்தாநமென்பதற்கு:—

(சினேந்திர மாலை)

நாகந்து நட்புக்கோ ன்மகர நாரியாம்
வேகந்தரும் வின் மீனுட்சிகுடம்-ஆகுங்கால்

உச்சந் தேளுற்றபகை நண்ட மேடம்
எச்சந் தருநீச மேறு.

இதனுல் வ்ருச்சிகம் பாம்புருவமென்றறிக. வ்ருச்சிகாம்சமான நாகத்தில் சக்ராயுதன் சயநித்ததாலும், அந்நாகம் விராட்ரூபமாகிய உலகத்தைத் தாங்குவதானுலும், கடல் கடைந்தமுதீந்ததாலும், இரவி லிருபதுநாழிகைக்கு மேல் இருபத்தைந்து நாழிகைக்குள் அதன் காலமாகையாலது உஷக்காலமாய் அக்காலையில் ப்ரஜைகளுக்குள்ள மனேகளங்கத்தை எல்லாம் தான் கவர்ந்துகொண்டு சித்தத்தில் தெளிவீந்து நின்றதாலிந்த வ்ருச்சிகத்தை மஹாயந்த்ரத்தில் த்யானித்து அர்ச்சித்து பூஜித்து, அதற்குரிய த்வாதசாக்ஷரத்தை ஆயிரமுரு உச்சரிப்பாராகில் விஷ உபாதி அற்றவராய் பாம்பு, தேள் இவை முதலியவற்றின் விஷம் போக்கடிக்கும் வல்லமையுடைய மந்த்ரஸித்தி பெற்று களங்கமற்ற சித்தத்தோடு வாழ்வர். தநுஸு இடுப்பின்கீழ் குதிரை புருவமாயும், இடுப்பிற்கு மேலொரு புருஷன் கையில் விற்பிடித்து கற்யாவதார முஹூர்த்தமாய் நின்று ராத்ரி-25-நாழிகைக்குமேலுதயம் வரையினிற்றலால், அக்காலையில் உலகத்தில் தனுர்மாஸத்தில் தெருமெழுகிப் பூக்கள் வைத்து அலங்கரித்தலும் தேவர்க்கெல்லாம் பூஜை செய்தலும், ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத் என்ற வாக்கியப்படி அக்காலம் சுத்த ஸாத்வீக காலமாதலாலதற்கதீசராகிய சாரங்கபாணியை வந்திப்பது வழக்கமாய் வருகிறது. அப்படிப்பட்ட தநுஸை குதிரைவாஹனமூர்பவரும், வில்வித்தையை அப்யஸிப்பவரும், அங்பராயுதத்தால் தனக்குப்பீடை யில்லாமையை யிச்சிப்பவரும், மஹாயந்த்ரத்தில் தநுர் ராசியை துதித்து அர்ச்சித்து பூஜித்து, அதற்குரிய த்வாதசாக்ஷரம் ஆயிரமுரு உச்சித்து உபாஸிப்பளுகில், களங்கமற்ற மனதுடன் அவர்கோரிக்கை முற்றும். ராசியின் விசேஷம் :—மகரம் மத்ஸ்யாவதார அம்சம் அது நைமித்திகப்ரளயத்தில் பக்தாளேயும், ஸகல வித்துக்களேயும் ஒரு கப்பலில் தாங்கி நின்று,வேதம் திருடியஅஸுரனேக்கொன்று ஜகத்ரக்ஷணம் செய்த மூகூர்த்மாயும், உத்தராயணத்தில் தேவர்க்குதய

மாய்5 நாழிகைக்குள்ள காலமாதலாலும்,அவ்வேளைற்செய்யும் நித்யகர்மாநுஷ்டான ஔபாசநம் முதலிய ஆந்நிகங்களும், மீனுருவாகிய நாராயணப்ரீதியாய்உதயத்திலே ஸகல மதஸ்தரு மெந்தஜாதி யாரும் செய்யும், அக்காலத்தியகர்ம மெல்லாம் வாஸுதேவப் பிரீதியேயாம். இத்தன்மைவாய மகரத்தை ஒருவன் ஜலத்திலுண்டாகும் அல்பவிஷ உபத்ரவமில்லாமலும், ஜலக்கண்டம்வராமலும், கிணறு, ஏரி, குளம் முதலியவருற் ஆபத்து வராமலும், கப்பல், தோணி முதலியதில்லாபங்கிடைசகும்பொருட்டும் அவைகளுக்கு திமிங்கிலம் முதலியவைகளாலிடையூறின்றி காப்பாற்றும் நிமித்தமாயும், தனது பயிர்களுக்கு நீர்வளம் குறைவில்லா மலிக்கும் பொருட்டும், மற்றும் ஸகல சம்பத்தும் பெற எண்ணமுள்ளவர் இந்த மஹாயந்திரத்தை மனதில் தியானித்து ராஹுவை அர்ச்சித்து, பூசித்து அவர்க்குரிய மூல மந்திரமாகியத்வாதசாக்ஷரத்தை ஆயிரமுரு உச்சரிப்பராகில் அவர் பிரார்த்தனை முற்றும்.

இந்தகுஜன் ருத்ரனுலாலும், அக்னிரூபனுதலாலும், ஸ்ரீ வாசுதேவரது சக்கர உருவாதலாலும், இந்த அங்காரகனை யுத்தத்தில் ஜயத்தின் பொருட்டும் வயிற்று நோய், ரத்தம், மூலம், ரணம், குத்தல் முதலிய ரத்த வியாதிகள் நீங்கும் பொருட்டும் பூமிபலன் பலிக்கும் பொருட்டும், தீர்க்காயுளுடன் புத்ரோத்பத்தியாகும் பொருட்டும், சௌக்கியத்தின் பொருட்டும், பிரார்த்தனையுள்ளவன் இந்த மகரச்செவ்வாயைத தியானித்து, பூஜித்து, அவற்று குரிய த்வாதசாக்ஷரத்தை ஆயிரமுரு உச்சரிப்பனுகில் மனோபீஷ்டம் நிறைவேறுமென்றும், இந்த அங்காரகன் மங்களகரனுதலாலும், இவன் அத்யுச்சராயிருந்தநக்ஷத்திரம் வஸு நக்ஷத்திரமாதலாலும், இரட்டை ராசியாதலாலும் களத்ரஸ்தானமாதலாலும், உபகரணும்சம் பூமி அம்சமே பலத்து நின்றதனுல், பூபுத்ரியே ஸ்ரீ ராமருக்கு களத்திரமாக வந்தாள். இவ்வாறு "மாலை நீடுறும்" என்றதால், த்வாதசாக்ஷரத்திற்கு அருகிலிருந்த பாரிஷதாளுக்குள்ள குணங்களையும், தொழில்களையும் ஒழுங்காக எடுத்துக் கொள்ளப்பட்டன.

இனி பிரம்ம காயத்திரிக்குரிய "கோளும்-இல்லும் நாடு-நீதிசேர் மாலைநீடுறும் என்றதால் இந்த மந்திரம் பிரம்ம மயமாதலாலும், ஸர்வலோக சிருஷ்டிகர்தாவாகிய பிரம்மாவையே அதிஷ்டானதெய்வமாகக் கொண்டு ஸர்வானுக்ரஹ சக்தியோடு நிற்பதாம்,

இதன் இனமாகிய கும்பம் தேவர்களுக்குதமாய் 5 நாழிகைக்கு மேல் 10 நாழிகைக்குள்ளாதலாலும் ஒரு புருஷன் கையில் பூர்ண கலசம் வைத்திருக்கும் மலரோனுருவாகியதை இம்மஹாயத்திரத்தில் தியானித்து இதற்குரிய மூலமந்திரமாகிய காயத்திரியை ஆயிரமுரு ஜபித்து, பூசிப்பராகில்தாகம்பசி இந்நோய்களால் உண்டாகும் உபத்திரவம் நீங்கும். இவைகளினால் துயருருன் ஜலகண்டம் அடையாது எனவும் மீனம். தேவர்களுக்கு உதித்து 10 நாழிகைக்குமேல்-15-நாழிகைக்குள்ளாதலின், அக்காலம் மாத்யாநீககாலமென்றும், இந்தராசி வாலுந்தலையுமாய் ஒன்றின் வாலை ஒன்று கவ்விக்கொண்டிருப்பதால், எந்த கர்மங்களிலும் செய்த ஆவாஹநஞ்செய்யுங்காலமென்னும் ஸந்ததி வ்ருத்தி உருவாதலின் கல்யாணம் முதலிய வ்ருத்திகரமான சுபகார்யங்களெல்லாம், அக்காலத்தில் செய்தால் உத்தம பலம் தருமென்றும், ஜகத்தில் ஜநநவிசேஷத்தால் வேதா அம்சமாகிய 'மீனத்தை மஹாயந்த்ரத்தில் த்யாநித்து அர்ச்சித்து பூசித்து, அதற்குரிய மூலமந்த்ரமாகிய காயத்ரியை ஆயிரம் உரு ஜபிப்பானாகில் புத்ர பாக்யமுண்டாகும். யத்தநித்த காரியங்கள் நிறைவேறும்.

மேஷம்பகல்-15-நாழிகைக்குமேல்-20-நாழிகைக்குள்ளாதலின், ஸுர்யனுக்கு அதிக பலமான உச்சஸ்தானமாதலாலும், அந்த ஸூர்யன் ஸாக்ஷாத் விதியினுடைய அம்சமாதலாலும், த்ரிமூர்த்திரூபமாதலாலும். லோகத்தில் ப்ரத்யக்ஷ தெய்வமாதலாலும், பீஜாட்சரமாகிய காயத்ரிக்கு அதிக பலகாலமானதாலும், அதை உரிமையாயுபாஸிக்குங்குலம், ப்ராஹ்மணகுலமானதாலவ்வந்தணர்க்கு மாத்ரம் மாத்தியாந்நீகம் அவசியம் செய்வதென ஏற்பட்டதாலும், அவர் புரியும் ஹவ்யகவ்யமெல்லாம் அக்காலைபிற் செய்வதெனவும், ஸகல தேவதாதாரமாம். ஆதி

ராசியாதலால் இதை ஒருவர் மஹாயந்த்ரத்தில் ஆவாஹ நம்பண்ணி அர்ச்சித்து பூசித்து, அதற்குரிய மூலமந்த்ர மாகிய காசத்ரிமை ஆயிரமுரு உச்சரிப்பராகில் நெய், பால் பாசுயம் வ்ருத்தியடையும் ஆடு, பசு முதலிய ஸம்பத்து விருத்திக்கும். அதன் நோய் நீங்கும். மீநத்திலிருக்கும் சுக்ரன் மலரவன் பேரராகி ம்ருதஸஞ்சீவி மந்த்ரம் ஸித்தி யுள்ள வராதலா லிவரை இந்த மஹாயந்த்ரத்தில் பாக்யஸ் தானத்தில் த்யாகித்து, அவர்க்குரிய காயத்ரியை ஆயிரமுரு உச்சரித்து அர்ச்சித்து பூஜிப்பராகில், களத்ரவௌஸக்கிய முண்டாம். மேஷத்திலிருக்கும் புதன் வ்யாபார வித்யா காரகனுதலா லிவர்க்குரிய காயத்திரிசை ஆயிரமுருஜபித்து ஆராதிப்பவருக்கு வ்யாபாரமும், வித்யாபலிதமு முண்டா கும். மேஷசூர்யன் ஸகலதேவாத் மகஸ்வரூபமாய் ஆயுள் தெய்வமாதலா லிவற்குரிய காயத்ரியை ஆயிரமுரு உச்ச ரித்து மஹாயந்த்ரத்திலர்ச்சித்து பூஜிப்பராகில், தீர்க்காயுளை அடைந்து அரோக த்ருடகாத்ரமாய் ஸகலசெல்வமும் பெற்று வாழ்வார்கள். இத்தன்மையாய்ப்ரஹ்ம காயத்ரிக் குரிய 'கோளும்' 'இல்லும்' 'நாடு' 'நீதி'சேர்' 'மாலை நீடுறும்' என்றதால் வருவிக்கப்பட்டது.

"இல் நீதிசேர்" என்றதற்கு மற்றேருருரை :—வீட்டை 16-பங்கு மண்ணென்றபடி செய்தால், நடுமுற்றம்-4-பங்கும் வெளி; மற்றசுற்று நான்கு புறமும்-12 ராசியாம், அம்முற்றம் தெய்வஸ்தான மாதலாகலத்தில் கல்யாணம். பொங்கல், சாந்திகளெல்லாஞ் செய்துவருகிறார்கள். யாவரும் வீட்டுத் தெய்வமென்பது அந்தமுற்றமேயாம். ஒரு சாந்தியில் ப்ரஹ்ம ஸ்தாநத்தில் பூர்ண கலசமும், ருத்ரஸ்தாநத்தில் ஆசார்யரும், அக்நியும், பச்சிமபாகத்தில் தம்பதிகளும். உத்தரபாகத்தில் ஸாதநங்களும் புரிவது இந்த அட்சரவிதிதான். ஒரு ஜாதகத்தை எழுத முதல் ஆயுள்பார்த்துத்தான் பின்பு மற்ற பலன்களையெல்லாம் பார்த்தெழுதவேண்டும். தீர்க்காயுளீபவன் சிவபிரானுதலாலும், யமனை உதைத்தவனுதலாலும், அக்கடவுளை ஆயுள் நீட்சியின் பொருட்டுத்யாநிக்க வேண்டுமென்பது தோன்ற, ஐந்தெழுத்தை முதலிற் சொன்னார்.

இனி அவற்றை ஓர் யாகமாகக்காட்டுமாறு .—'கல்' என்றதால். கீழே பீட பூஜைபண்ணி 'கடகம்' எனலால தன்பேரில் கடம்வைத்து 'நீ' என்றபடி ஆசார்யர்பேரி லாவாஹித்து 'தீ' என்றபடி அக்நி முகத்திலாஹூதி செய்து 'சேரோடை, எனலால் கடகத்தின் பேரில் தகடு வைத்து 'மா' எனலால் விபூதி யந்த்ரம் பக்கத்திலெழுதி ஒரே சாந்நியிலும், இந்த அறுவகை ப்ரயோகங்களையும் செய்யவேண்டுமெனருகிறது. முன்சொல்லிய விஷயத்திற் கெல்லாம் இவ்வறுகை ப்ரயோகங்களும் வேண்டுவது தான். இந்த சாந்தி பதிஞெருதிநஞ் செய்ய வேண்டும். ப்ராஹமணர்கள் பதினைந்து பேர் ஜபம் செய்யவேண்டும். 'உதயம் எனலால், ஜன்மதிநத்திற்கும் 4, 7, 10 இந்ததிநங் களுக்கும் உதயம் எனலால் பஞ்சாக்ஷர, அஷ்டாக்ஷர, த்வாதசாக்ஷர, சுாயத்திரியால் செய்யவேண்டிய ஷட்ப்ர யோகங்களும், பின்பு 'ராசி' எனலால் ஜன்மலக்னம் தவிர ராசிகள் 11-க்கும், 'ஏகாதசர்' என்றபடி ஏகாதசருத்ரங் களும் 2, 5, 8,-இந்த திநங்களில் பாராயணமாத்திரமும், 'தோள்' என்றதால், நவக்ரஹங்களுக்கும், 'நால்வர் என்ற படி, 3, 6, 9-அந்த திநங்களில் நாலுவேந பாராயணமாத்ர முஞ் செய்ய வேண்டும். நாலுகேந்த்ரங்களிலும் பரமோச் சக்ரஹங்கன் நால்வர் நிற்பதாலவைகள் விசேஷ திநமென் ருயிற்று.

இந்த யந்த்ரா ராதநத்திற்சூரிய ருத்விஜாள் லக்ஷணம் .—

"உதய ராசிகோணுடி லேகாதசர் நால்வருச்சரே" எனலால், 'உதயராசி கோட்கு' மஹாயந்த்ரத்தின் ஆராத நத்திற்கு 'நாடில்' பத்நியுடன் குடும்பியாயிருப்பவரில் ஏகாதசர் (11) வரும். 'நால்வருச்சரே' நால வருயர்ந்தவரு மாக யிருக்கவேண்டுமென்ருகிறது. உயர்ந்தவரெனலால் நடுநிற்கும் நான்கு மஹாயந்தரம் ஜபித்தற்கு தான்குவகை யாம், பரமபாகவதர்களாக இருக்கவேண்டு மென்ருகிறது இந்நால்வர் லக்ஷணம் :—

இத்தன்மையராகிய நான்கு வித உபாஸங்ய பக்தர்களே ஜபத்துக் கெரியரெஸல் தோன்ற, ‘நால்வருச்சரே’ என்ருர்.

விஞ:—இந்த யந்த்ரஸ்தாபநம் வால்மீகரெங்கேசொன்ஞர்?

**कौसल्या शुशुभेतेन पुत्रेणामिततेजसा ।**
**यथावरेणदेवानां अदितिर्वज्रपाणिना ॥**

கௌஸல்யா — தேன — புத்ரேணுமிததேஜஸா — வரேண வஜ்ரபாணிஞ, எனப்பிரித்து கௌ எனலால் பூமி ஸம்பந்த மானஸ்தானமென்றும், ஸல்யா என்பதை நடுக்குறை யாய்ஸலிலயா எனக்கொண்டுஜலந்தங்கியஸ்தானமென்றும் தேன என்றதால், உன்ஞலே என்முன் நிலேயில் என்றும் அமிததேஜஸா புத்ரேண எனலால் ரூபத்திற்கு முக்யகுணம், அக்நி என்றும், அக்நிபுத்ராஞல் எனலால் அக்நி புத்ராளாகிய பாவகஞனவன் படபாமுகாக்நி, பவமானன் என்பவன் ஸூரியனிடத்திலுறையும் அக்நி, சுசி என்பவன. பூமியினிடத்தில் வழங்கும் அக்நி, இந்த மூன் றக்நிகளில் பூமியினிடத்தில் உறையும் சுசி என்னு மக்நியினிடத்தென்பது தோன்ற ‘புத்ரேணுமிததேஜஸா’ என்றும் சொன்ஞர். இதஞல் அக்நியிஞலே என்றும், ‘வரேண’ எனலால் வரணமென்கிற எழுத், யோக்யமானவென்றதால் தகடுமுதலியவற்றிஞல், ‘வஜ்ரபாணிநா’ எனலால் வஜ்ரபாணியென்று விபூதி முதலிய தூள்வஸ்துக்களுக்கு மந்த்ரவாதபந்துக்கட்டின் ஸம்க்ஞாநாமமாதலால் தூள்களிஞலென்றும், இந்த ஆறுவகை ஸ்தாநங்களிஞலும், மஹாயந்த்ரா நுஷ்டாநம் செய்வாராகில் ‘யதாவரேண’ எனலால் எவ்வாருய்த் த்யாநித்து பூஜிக்கிருர்களோ அவ்வாருய் பேறடைவர் சொன்ஞர்.

விஞ :—இந்த ஒரு வாக்கியத்தில் இவ்வளவு தாத்பரியம் அடங்கியிருங்போன்றுள பாடல் இதரநூல்களிலும் கேட்க விரும்புகிறேன் ?

விடை :—இதுபோன்றவை அநேகம் நூலி லிருக்கின்றன.

ஐந்தாவது உரை—முற்றிற்று.